


ஜலதோஷம், அதைத்தொடர தொண்டை கரகரப்பு, எரிச்சல்—அதுதான் சாதாரண இருமல். அசட்டை செய்தால், அது மார்ச்சளி நோய், இழுப்பு—ஏன் க்ஷயரோகம் கூட—முதலிய அபாயகரமான வியாதிகள் விளைவிக்கக்கூடும். காலாகாலத்தில் சிகிச்சித்து குணப்படுத்தினால் உயிர்சேதம் தவிர்ப்பது போலாம்.

சாதாரண இருமலை பூர்ணமாக சொஸ்தப்படுத்த டாக்டர்கள் கிளைகோடின் - டெர்ப் - வஸாகாவைத்தான் பரக்க சிபார்சு செய்வதும், கொடுத்து வருவதும். அது விஷ நீரோ, விக்கமோ இருப்பதை உடனடி வெராத்தாக்கி, அதன் நோயாற்றும் பொருள்களின் குண விசேஷங்களால் ஆசுவாஸமளித்து இருமலை அடியோடு ஒழிக்க உதவிபுரிகிறது.

தேக உறுப்புகள் சம்பந்தமான அபாய கோளாறுகள் காரணம் ஏற்படும் எல்லா இருமல் நோய்களுக்கும் உங்கள் டாக்டரைக்கண்டு யோசனை கேளுங்கள்.



# கிளைக்கோடின் டெர்ப்-வஸாகா

## இருமலை நசித்து குணப்படுத்துகின்றது

அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கம்பெனி லிமிடெட், பரோடா

AL. 257—Tamil




## நல்ல உயர்ந்த பண்டங்களையே விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நம்மில் எல்லோரும் மேன்மை யான பண்டங்களையே விரும்புகிறோம். சிகரெட்டில் சிறந்த புகையிலையை உபயோகித்தால்தான் அது விரும்பிப் பலராலும் சிறந்ததென்று சொல்லப்படும். டிலக்ஸ் டெனுர் சிகரெட் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. பலரும் வாங்கி ஆனந்தமாக அனுபவிக்கலாம். உத்தர வாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலைகளாலேதான் டிலக்ஸ் டெனுர், சிகரெட்டுகள் செய்யப்படுகின்றன.

டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor** is truly a de luxe Cigarette

JAMES CARLTON LTD, LONDON. EASTERN LICENCEES, POST BOX No. 470, CALCUTTA



# கல்கி பொருளடக்கம்




மலர் 4 இதழ் 16 | 1944 நவம்பர் 19 | தாரண ஸு கார்த்திகை 4




"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

சாதாரணமாக, ஒரு தனி மனிதருக்குக் கிடைக்கும் உத்தியோகமானது பொது ஜனங்களின் கவனத்தைக் கவர்வதில்லை. ஆனால், மைசூர் ராஜ்யத்தின் மந்திரி உத்தியோகம் ஸ்ரீ புள்ள ரெட்டியாருக்குக் கிடைத்த விஷயம் விசேஷ முக்கியம் பெற்றுவிட்டது. மைசூர்ச் சட்ட சபையில் அவருடைய நியமனத்தைக் கண்டிப்பதற்கு அறிகுறியாக நூறு அங்கத்தினர் 'வாக்-அவுட்' செய்தார்கள்!

மைசூர்ப் பிரதிநிதிகள் அயல் மாகாணத்து மனிதரின் நியமனத்தை விரும்பாதது பற்றி நாம் ஒன்றும் அபிப்பிராயம் சொல்வதற்கில்லை. ஆனால், ஒரு விஷயம் மட்டும் உறுதியாகக் கூறுவோம். ஸ்ரீ புள்ள ரெட்டியாரின் மந்திரி உத்தியோகம் நீடித்து நடக்குமானால், அதன் முடிவில், "இன்னும் கொஞ்ச காலம் ஸ்ரீ புள்ள ரெட்டி மந்திரி வேலை பார்க்க வேண்டும்!" என்று இதே ஜனப் பிரதிநிதிகள் தீர்மானம் செய்வார்கள்.

சென்னை நகரசபைக் கமிஷனர் பதவியிலிருந்து சமீபத்தில் அவர் விலகியபோது, நகரசபை அங்கத்தினர்கள் அம் மாதிரிதான் ஏகமனதாகக் கோரினார்கள். சென்னை வாசிகளின் ஏகமனதான கோரிக்கையைத்தான் நகரசபை அங்கத்தினர் அவ்விதம் வெளியிட்டார்கள். ஸ்ரீ புள்ள ரெட்டியின் இனிய சாந்த சுபாவத்துடன் சேர்ந்த நிர்வாகத் திறமை அவ்விதம் எல்லாருடைய அபிமானத்தையும் கவர்ந்திருந்தது. அந்த சாந்த சுபாவமும் நிர்வாகத் திறமையும் மைசூரிலும் அவருக்குத் துணை நின்றே தீருமல்லவா?





நடன கலாமணி

# A. N. பெரிய நாயகி

(கும்பகோணம்)

பந்தணை நல்லூர் நாட்டியக் கலாநிதி
மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களின்
மாணவி

## பரத நாட்டியம், அபிநயக் கச்சேரி



*18 - 11 - 44* தமிழிசைச் சங்கம் திருநெல்வேலி

*19 - 11 - 44* தியாகப் பிரும்ம சபா, அம்பாசமுத்திரம்

*30 - 11 - 44* தமிழிசைச் சங்கம், வலம்புரி (புதுக்கோட்டை)

*17 - 11 - 44* பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடி, கள்ளிக்கோட்டை

---

குழந்தைகளின் சரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு ஜம்பி "லிவர்க்யூர்."

## அறிவிப்பு

*சென்னை, ஜம்பி வெங்கட்ரமணய்யாவின் குமாரர், சரல் குலைக்கட்டி நிபுணர் கீழ்க்கண்ட இடங்களுக்கு விஜயம் செய்கிறார். அது சமயம் குழந்தைகளின் சரல் குலைக்கட்டி சம்பந்தமான எல்லா வியாதிகளையும் நேரில் காண்பித்து அவரிடம் யோசனைகள் கேட்டுக் கொள்ளலாம்.*

பரிசோதிக்கும் நேரம் காலை 9 முதல் 11-30 வரை. மாலை 3 முதல் 6 வரை.

| இடம் | தேதி | விலாஸம் |
|---|---|---|
| காஞ்சீவரம் : | 18-11-44 | டாக்டர் டி. கே. நடேசய்யர் சாலை தெரு |
| வேலூர் : | 20-11-44 | ஸ்ரீ வி. பி. சிவம், கெமிஸ்ட், லாங் பஜார் |
| கரூர் : | 21-11-44 | மெஸர்ஸ். ஜி. அண்ணாமலை பிள்ளை & ஜி. என். மருத நாயகம் பிள்ளை, ஜெனரல் மர்ச்செண்ட்ஸ், பஜார் தெரு |
| ஈரோடு : | 22-11-44 | முனிஸிபல் சத்திரம், அக்ரஹாரம். |
| சேலம் : | 23,24-11-44 | மெஸர்ஸ். சேலம் மெடிகல் சட்டீஸ் & பார்மஸி லிமிடெட்., பஜார் தெரு |
| திருப்பூர் : | 25-11-44 | மெஸர்ஸ். ஆர். எஸ். வாஸன் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| கோயமுத்தூர் : | 26,27-11-44 | மெஸர்ஸ். சன்வர் & கோ., கெமிஸ்ட்ஸ் ராஜா தெரு |
| திருச்சினாப்பள்ளி: | 28,29-11-44 | பிராஞ்சு ஆபீஸ், 17, நேரடிக் கடைத் தெரு, தெப்பக்குளம் |

## ஜம்பி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்

கும்பகோணம் :: மதராஸ்




மலர் 4 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 16

# என்ன சேதி?

## யமனுக்கும் பெப்பே!

திருவாங்கூர் திவான் ஸர் ஸி. பி. ராமஸ்வாமி பெரிய தீரர் என்பது அனைவரும் அறிந்த விஷயம். ஆயினும், ஒரு சின்ன சமஸ்தானத்துக்குள் உட்கார்ந்து கொண்டு அவருடைய தீரத்துக்கும் சாமர்த்தியத்துக்கும் உகந்த காரியங்களை அப்படி என்ன செய்ய முடியப் போகிறது என்று சிலர் சந்தேகப்பட்டிருக்கலாம். ஆனால், வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் அல்லவா? "இந்தத் திருவாங்கூர் முடுக்கில் இருந்துகொண்டே உலகத்தின் கவனத்தைக் கவரும்படியான காரியங்களைச் செய்வேன்" என்கிறார் ஸர் ஸி. பி! தீண்டாமை என்னும் வியாதி மிகக் கொடிய சொரூபத்துடன் நிலைத்திருந்த திருவாங்கூரில் ஆலயங்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட்டு ஒரு பெரிய சமூகப் புரட்சியை உண்டு பண்ணினார்! இந்த வருஷத்தில் மேற்படி ஆலயத்திறப்பு தினத்தன்று, "திருவாங்கூரில் இனிமேல் மரணதண்டனை கிடையாது!" என்று ஒரு வி. 2. குண்டை எடுத்துப் போட்டு, உலகத்தைத் திகைக்க அடித்திருக்கிறார்! இந்த மரண தண்டனை ஒழிப்பு சாதாரண குற்றங்களைப் பொறுத்த வரையிலே தான் என்பதும், இராஜாங்கக் குற்றங்களுக்கு அல்லவென்பதும் உண்மையே. ஆனால் இப்படியெல்லாம் இராஜாங்கத்தார் நல்ல நல்ல பிரமாதமான காரியங்களைச் செய்துவரும்போது இராஜாங்கக் குற்றம் என்பது அந்த சமஸ்தானத்தில் ஏன் ஏற்படப் போகிறது? எனவே அதையும் ஒரு வழியாக ஒழித்து விட்டால் ஒரு மோசமும் ஏற்படாது.

## திருப்புகழ் மணியின் பணி

திருவாங்கூருக்கு எப்படி எப்படியோ அடித்துக் கொண்டுவரும் அதிர்ஷ்டங்களில், நமது திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அந்த சமஸ்தானத்தின் பிரதம நீதிபதியாகப் போயிருப்பதும் ஒன்று. அருள் உள்ளம் படைத்த திருப்புகழ் மணி நீதி செலுத்தும் நாளிலே திருவாங்கூரில் மரண தண்டனை ஒழிந்தது மிகப் பொருத்தம் என்பதில் ஐயமில்லை. ஆனால், திருப்புகழ் மணியினால் திருவாங்கூர் அடைந்த அதிர்ஷ்டம் இது ஒன்றுதானா? கோர்ட்டிலே வருஷக் கணக்காகச் சேர்ந்திருந்த கேஸ் கட்டுக் குப்பைகளையெல்லாம் பெருக்கித் தள்ளிச் சுத்தம் செய்ததோடு திருப்புகழ் மணி நின்று விடவில்லை. கையிலே விளக்குமாறு பிடித்துத் திருவாங்கூர் வீதிகளைச் சுத்தம் செய்யவும் ஆரம்பித்துவிட்டார் என்று சமீபத்தில் பத்திரிகைகளில் படித்தோம்! இத்தகைய அடியார்க்கு அடியாரை, தொண்டருக்குத் தொண்டரை, திருவாங்கூர் ராஜ்யத்துக்கு அனுப்பிவிட்டு வாயிலே விரலை வைத்துக் கொண்டு நிற்கும் சென்னை வாசிகளின் புத்திசாலித்தனத்தை என்ன வென்று சொல்வது?

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழில் வெளியான "ஆச்சரியம்" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஸ்ரீமதி ருக்மணி, சேத்துப்பட்டு, சென்னை.

# நிகழ்ச்சிச் சித்திரம்

உண்ணா விரதம்

காந்தி மகாத்மா உண்ணாவிரதம் மேற்கொள்ளக்-கூடாதென்று தேச-மெங்கும் வேண்டுகோள் கிளம்பியிருக்கிறது.




ஸிந்து மாகாண மந்திரி சபைக்கு ஒரு ஐரோப்பியரும் நியமிக்-கப்பட்டிருக்கிறார்.

உணவு மெம்பர் ஸ்ரீ வாத்ஸவாவை இந்திய சட்ட சபையில் காங்கிரஸ்-லீக் அங்கத்தினர்கள் பிய்த்து இழுத்து விட்டார்கள்.



-உம்மன்


பிரஸிடென்ட் பதவியைக் காட்டிலும் மனுஷர் ரூஸ்வெல்ட் பெருத்துத் தோற்றமளிக்கிறார்.
அமெரிக்க பிரஸிடென்ட் பதவி


ருஷியா
பிரிட்டன்
ஈரான்
அமெரிக்கா
மூன்று வல்லரசுகளும் சேர்ந்து ஈரான் நாட்டின் எண்ணெய் உரிமைகளைப் பறிப்பதில் முனைந்திருக்கி-றார்கள்.


பிராங்கோவின் ஆட்சி, ஆட்டம் கொடுத்திருக்கிறது.
ஸ்பெயின்


“ஆக்கிரமிப்புக்காரன் நீ!” என்று ஸ்டாலின் ஜப்பான் மீது குற்றம் சாட்டி இருக்கிறார்.

# அடித்தது யோகம்

"வாருங்கோ, ஐயா! வாருங்கோ!" என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டோம். நமது காரியாலயத்தில் நமக்கு முன்னால் வந்து உட்கார்ந்து நம்மை வரவேற்பது யார் என்று பார்த்தோம். வேறு யாருக்கு அந்தகைய துணிச்சல் ஏற்படக் கூடும்? நமது பழைய கறுப்புத் தொப்பிச் சர்ச்சில் துரைதான்!

"ஏன், ஐயா! இவ்வளவு நேரம்? உமக்காக எத்தனை நேரம் காத்துக் கொண்டிருப்பது? நான் காலையிலே பாரிஸில் விழித்தெழுந்து இங்கே வந்திருக்கிறேன்; உமக்கு வீட்டிலிருந்து எழுந்து வருவதற்கு இவ்வளவு நேரமா? இதனால்தான் இந்தியர்களைப் பற்றி ......"

"மன்னியுங்கள்! இந்தியர்களைப் பற்றி அகௌரவமாக இந்த இடத்தில் ஒன்றும் சொல்ல வேண்டாம்!"

"போகட்டும்: அப்பேர்ப்பட்ட நானே விஜயம் செய்திருக்கிறேன். ஒரு வரவேற்பு உபசாரம்கூடச் சொல்லாமல் இருக்கிறீரே? பாரிஸ் மாநகரத்து மாந்தர் என்னை எப்படி எல்லாம் வரவேற்று உபசரித்தார்கள் தெரியுமா?"

"சந்தோஷம்! தாங்கள் திடீரென்று பாரிஸ் மாநகரத்துக்குப் பறந்து சென்றதின் காரணம் என்னவோ?"

"அதைப் பற்றிச் சொல்வதற்காகவே தான் இவ்வளவு அவசரமாகப் புறப்பட்டு வந்தேன். விஷயம் தெரியாமல் நீர் ஏதாவது கன்று பின்று என்று எழுதி வைத்தாலும் வைப்பீர். என்னுடைய பாரிஸ் விஜயத்தைப் பற்றி என்ன எழுதுவதாக உத்தேசம்?"

"தாங்கள் சொன்னால் அந்தப்படியே எழுதி விடுகிறேனே."

"நான் சொல்வதற்காக எழுதக் கூடாது. நீராகவே எழுத வேண்டும். பெரிய பெரிய பிரிட்டிஷ் பத்திரிகைகள் அப்படித்தான் செய்கின்றன. நான் சொல்கிறது சொல்கிறபடி நீராகவே சொந்தமாய் எழுதும் பார்க்கலாம்:—

"மகாகனம் பொருந்திய பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் சென்ற வாரத்தில் ஆகாய மார்க்கமாகப் பாரிஸ் மாநகருக்கு விஜயம் செய்தது, உலக சரித்திரத்திலேயே ஒப்பற்ற ஒரு சம்பவமாகும். பறக்கும் குண்டுகள் என்ன, மணிக்கு 3000 மைல் போகும் வி. 2 பயங்கரக் குண்டுகள் என்ன, இவையெல்லாம் ஆகாசத்தில் எதிர்ப்படக்கூடும் என்று தெரிந்தும், அஞ்சா நெஞ்சம் படைத்த சர்ச்சில் ஆகாச விமானத்தில் ஏறிப் பாரிஸில் வந்து இறங்கினார். வழிநெடுகக் கூடியிருந்த பாரிஸ் மாநகரின் லட்சக் கணக்கான மக்களை அவர் பார்க்க முடியாமலும், அவரைப் பாரிஸ் மக்கள் பார்க்க முடியாமலும், அவருடைய மோட்டார் வண்டியை மூடியிருந்த போதிலும் மனஸுக்கு மனமே சாட்சி என்பது போல, சர்ச்சிலும் பாரிஸ் மக்களும் வரவையும் வரவேற்பையும் உணர்ந்து ஆனந்தக் கடலில் மூழ்கினார்கள்.

பின்னர், பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில், பிரெஞ்சு அரசாங்கத் தலைவர் டி காலுடன் நடத்திய சம்பாஷணையானது, உலகத்தின் சரித்திரத்திலேயே ஒரு மகத்தான புரட்சியை உண்டு பண்ணக் கூடியதாகும். டி காலின் கோரிக்கைகள் ஒவ்வொன்றையும் மேல மேஷம் பார்க்காமல் சர்ச்சில் டக், டக் என்று ஒப்புக்கொண்டு வந்ததானது, உலகமே பிரமிக்கத்தக்க ஓர் அற்புதக் காட்சியாயிருந்தது. 'ஐரோப்பிய ஆலோசனை சபையில் சம பதவி வேண்டுமா? சரி!' 'யுத்த தளவாடங்கள் தர வேண்டுமா? சரி!' 'பிரான்ஸின் பெரிய சைன்யம் அமைக்க உதவ வேண்டுமா? சரி!' 'பிரான்ஸின் பொருளாதாரத்தைச் சீர்திருத்தித் தர வேண்டுமா? சரி!' 'உணவுப் பொருள் வேண்டுமா? சரி!' 'யுத்தம் முடிந்ததும் ஜெர்மனியின் நிர்வாகத்தில் பிரான்ஸுக்கும் பங்கு வேண்டுமா? சரி!'... இப்படியாக, டி கால் கேட்டதையெல்லாம் விசாலபுத்தியுடன் கொடுத்து வந்த சர்ச்சில், ஆறு மாதத்துக்கு மேல் யுத்தத்தை நீடிக்கச் செய்வது மட்டும் தம்மால் நிச்சயமாக உறுதி கூற முடியாத விஷயம் என்று சொல்லி விட்டார். இதிலிருந்தே நமது மகத்தான பிரதம மந்திரியின் தீர்க்கதிருஷ்டி எவ்வளவு தூரம் ஊடுருவிச் செல்கிறது என்பதை நன்கறியலாம்......"

இந்த இடத்தில் நாம் எழுதுவதை நிறுத்தி, "இது வரைக்கும் நீங்கள் சொன்னபடி நானாகவே எழுதி விட்டேன். இனிமேல், சில சந்தேகங்கள் கேட்கலாமா?" என்றோம்.

"உமக்கு ஏதாவது சந்தேகம் வந்து விடுமென்று தெரியும். அதற்காகத் தான் நேரில் வந்தேன்."

"திடீரென்று தங்களுக்கு டிகால்மீது ஏன் இவ்வளவு காதல்?"

"டிகால் இருக்கிறானே, வெகு தங்கமான மனிதன்; அசாத்திய புத்திசாலி! இந்த யுத்தம் ஆரம்பிப்பதற்கு வெகு காலம் முன்னாலேயே அவன் என்ன சொன்னான், தெரியுமோ, இல்லையோ?"

"இருந்தபோதிலும், டிகாலை நீங்கள் இவ்வளவு தூக்கி விட்டுக்கொண்டிருப்பது நியாயமா? அப்புறம், பழைய பிரஞ்சுக் காலனிகளை யெல்லாம் அவன் திருப்பிக் கேட்டால்?......"

"'கேட்டால்' என்ன வந்தது? கேட்கத்தான் கேட்பான். கொடுக்க வேண்டியதுதான்!"

"சரியாய்ப் போச்சு! பிரான்ஸு பாடு யோகந்தான்! இத்தனைக்கும், யுத்த ஆரம்பத்தில் பிரான்ஸு செய்த துரோகத்தை நினைத்தால்.........! பிரான்ஸ் யுத்த நிறுத்தம் செய்யாமலிருக்க அப்போது நீங்கள் என்ன பாடு பட்டீர்கள்? பிரஞ்சு சாம்ராஜ்யத்தைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் சேர்த்து எல்லா அம்சங்களிலும் சம உரிமை கொடுப்பதாகக்கூடச் சொன்னீர்கள். அதைக் கேட்காமல் பிரஞ்சுக்காரர் கத்தியைக் கீழே போட்டது மல்லாமல், அப்புறம் ஜெர்மன் நாஜிகளுடன் ஒத்துழைக்கவும் செய்தார்களே? அப்படிப் பட்டவர்களுக்கா......?"

"எப்போதும் கெடுதலையே நினைக்கக் கூடாது. நல்லதையும் நினைத்துப் பார்க்க வேண்டும். பிரஞ்சுக் கப்பற் படையை நாஜிகளிடம் ஒப்புவிக்காமல் கடலிலே ஆழ்த்தி விடவில்லையா? அந்த சமயம் நமக்கு அது எவ்வளவு பெரிய உதவி?"



"அதாவது, அபகாரம் செய்யாததையே ஒரு பெரிய உபகாரம் என்கிறீர்கள். அப்படியானால் அபகாரமும் செய்யாமல் பேருபகாரமும் செய்து வந்த இந்தியா விஷயம்......"

"இந்தியா இருக்கட்டும். பிரஞ்சுக்காரர்கள் இந்த யுத்தத்தினால் எத்தனை கஷ்டங்களுக்கு ஆளானார்கள் தெரியுமா? எத்தனை பேர் செத்துப் போனார்கள் தெரியுமா?"

"இந்தியாவிலுந்தான் யுத்தப் பஞ்சத்தினால் ஜனங்கள் லட்சக் கணக்கில் செத்துப் போனார்கள்!"

"பஞ்சத்தினால் செத்துப் போனதெல்லாம் கணக்கிலே சேர்த்தி யில்லை. மேலும் பிரான்ஸ் தேசம் மேற்கு ஐரோப்பாவில் இருக்கிற தென்பதை மறந்துவிடக் கூடாது?"

"அப்படிச் சொல்லுங்கள்! இப்போ தல்லவா விஷயம் தெளிவாகிறது? பிரான்ஸ் மேற்கு ஐரோப்பாவிலே இருக்கிறது; அதனால்தான் அதற்கு யோகம் அடிக்கிறது! யுத்த ஆரம்பத்தில் பிரான்ஸ் திடீரென்று ஆயுதத்தைக் கீழே போட்டிருக்கலாம். அதனால் பிரிட்டிஷ் துருப்புகளுக்குப் பெரும் ஆபத்தை உண்டுபண்ணியிருக்கலாம். நல்ல தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று பிரிட்டிஷ் துருப்புகள் டன்கெர்க்கிலிருந்து ஓடவேண்டி வந்திருக்கலாம். அப்புறம் பெடேயின் ஆட்சியில், பிரான்ஸின் இராணுவ முன்னேற்பாடுகளெல்லாம் ஜெர்மனிக்குப் பயன்பட்டிருக்கலாம். இங்கிலாந்தின்மீது பறக்கும் குண்டு விடுவதற்குப் பிரஞ்சு பூமியை உபயோகப்படுத்தியிருக்கலாம். இப்படி யெல்லா மிருந்தபோதிலும், பிரான்ஸ் பிரான்ஸுதான்! ஏனெனில், அது ஐரோப்பாவில் — அதிலும் மேற்கு ஐரோப்பாவில் — இருக்கிறது. மேற்கு ஐரோப்பாவில் பிரான்ஸைப் போன்ற ஒரு தேசம் பலத்துடன் இராவிட்டால், அப்புறம் ருஷியாவின் முன்னேற்றத்தை எந்த இடத்தில் நிறுத்துவது? மத்திய ஐரோப்பாவில் ஜெர்மனியையும் இதாலியையும் சின்னாபின்னம் செய்தாக வேண்டும்! ருஷியாவின் செங்கொடி பெர்லினில் வந்து பறக்கப் போவது நிச்சயம். அதற்கு அப்புறமாவது ஓர் அணை கோலிக் கொள்ள வேண்டாமா? வாஸ்தவம்! பிரான்ஸுக்குச் சப்பைக் கட்டு கட்டித் தான் ஆகவேண்டும். ஜெர்மனி தோற்றபின் அதன் நிர்வாகத்திலும் ஒரு பங்கு கொடுத்துத்தான் ஆகவேண்டும்!......"

"நான் சொல்லாமலே ரொம்ப விஷயங்களைத் தெரிந்துகொண்டு விட்டார். சந்தோஷம்!......"

"எது எப்படியானாலும், டிகாலைக் கட்டாயம் பெரிய மனிதனாக்கி வையுங்கள். டார்லன் தொலைந்து போனதுகூட ஒரு விதத்தில் நல்லது தான். யுத்தத்துக்குப் பின்னால் கூடும் சமாதான மகாநாட்டில் பிரான்ஸ் ஒரே வாயினால் பேசலாமல்லவா?"

"ஆமாம்; சமாதான மகாநாட்டில் டி கால் என் பக்கத்தில் இருந்தால், ஆயிரம் யானை பலத்துக்குச் சமானம்."

"அத்தகைய பக்க பலம் தங்களுக்கு அவசியம் வேண்டியதுதான். ஏனெனில், அதிகப்பிரசங்கிகளான அமெரிக்கர்கள் ஏதாவது அட்லாண்டிக் சாஸனம் என்று ஆரம்பிப்பார்கள்! ஏகாதிபத்தியம் உதவாது என்பார்கள். இந்தியா, பர்மா, இந்தோ சைனா முதலிய நாடுகளுக்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டும் என்பார்கள். 'அதெல்லாம் முடியாது' என்று சொல்வதற்குப் பக்கத்தில் டி கால் இருந்தால் சௌகரியமாகத்தான் இருக்கும்."

"டி கால் அப்படிப் பளிச்சென்று சொல்லக் கூடியவன்தான். பழைய பிரஞ்சு சாம்ராஜ்யத்திலிருந்து ஒரு அங்குலத்தைக்கூட விட்டுக் கொடுக்கச் சம்மதிக்கமாட்டான்! மகா தீரன்!"

"ஆகக்கூடி, இப்போது உலகத்திலே உங்களுக்கு அடுத்தபடியாகப் பெரிய மனிதன் டி கால்!"

"ஆமாம்!"

"ஸ்டாலின்கூட அப்புறந்தான்!"

"அது எனக்குத் தெரியாது."

"ரூஸ்வெல்ட்?"

"என் அருமை ரூஸ்வெல்ட்டைப் பற்றியும், என் உயிர்க்குயிரான அமெரிக்கரைப் பற்றியும் ஏதாவது சொல்லிவிடப் போகிறாய்! ஜாக்கிரதை! ஜாக்கிரதை! சொன்னேன், சொன்னேன், முக்காலும் சொன்னேன்!"

"சியாங்-கேய்-ஷேக்?"

"ஐயய்யய்ய!"

"மகாத்மா காந்தி?......"

"என்ன சொன்னாய்? யார் பெயரைச் சொன்னாய்?" என்று சர்ச்சில் துரை நம்மை உற்றுப் பார்த்தார். நாமும் அவரை உற்றுப் பார்த்தோம். சற்று நேரத்துக் கெல்லாம் நெருப்புப் பொறி போன்ற இரு கண்கள் மட்டும் தான் தெரிந்தன. தலையை ஒரு அசக்கு அசக்கிவிட்டு மறுபடியும் பார்த்தால், சர்ச்சில் வீற்றிருந்த இடத்தில், நமது ஆபீஸ் கறுப்புப் பூனையார் மௌனக் காட்சி அளித்தார்!

# திருப் பணியில் பங்கு

தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் புத்துயிர் தந்த தேசிய மகாகவி பாரதியாரின் ஞாபகார்த்தமாக ஒரு கட்டிடம்; அந்தக் கட்டிடத்தில் ஒரு **புத்தகாலயம்**; — பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் இத்தகைய ஞாபகச் சின்னத்தை அமைப்பதாக ஏற்பாடு.

இந்தப் புனித கைங்கரியத்தில்,— உத்தமத் திருப்பணியில், — நமது பங்கும் சேரவேண்டுமென்று ஆர்வங் கொள்ளாத தமிழர் யார் இருக்க முடியும்?

வெள்ளக்கால் ராவ்பகதூர் சுப்பிரமணிய முதலியார் அவர்களுக்கு வயது 92; ஆயினும், உற்சாகத்திலே இளம்பிராயந்தான். பாரதி ஞாபகச் சின்னம் என்று கேட்டதும் அந்த வாலிபக் கிழவர் துள்ளி எழுந்தார். மணியார்டர் பாரத்தைத் தம் கைப்படப் பூர்த்தி செய்து, பத்து ரூபாய் அனுப்பினார்! இந்த முது பெருங் கிழவர் காட்டிய உற்சாகமானது வாலிபத் தமிழர்களுக்கு வழிகாட்டியாயிருக்க வேண்டாமா?

நல்லது; இளந் தமிழர்களும் சும்மா இருந்து விடவில்லை. திருச்சிராப்பள்ளி ஜோசப் ஹாஸ்டல் மாணாக்கர்கள் தங்களுக்குள் வசூல் செய்து ரூ. 61 அனுப்பியிருக்கிறார்கள். முதுமைக்கும் வாலிபத்துக்கும் சேர்த்து 'ஜே' போடுகிறோம்.

மொத்தத்தில் நிதி வசூல் உற்சாகமாகத் தான் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் இது போதுமா? தமிழ் நாட்டின் பெருமைக்கே அறிகுறியாக விளங்கப் போகும் தலைசிறந்த திருப்பணிக்கு உங்கள் பங்கைச் செலுத்தியாகிவிட்டதா? செலுத்தியிருந்தால், உங்கள் நண்பர்களுக்கும் தயவு செய்து ஞாபகப் படுத்துங்கள்!

## இந்த வாரத்து வசூல்

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ இ. பி. பாலசுப்ரமண்யம், கூனூர் | 111 | 11 | 11 |
| ஸ்ரீ எஸ். கே. சுந்தரராமையர், சென்னை | 100 | 0 | 0 |
| திருச்சி ஜோஸப் ஹாஸ்டல் மாணவர் சார்பாக (ஸ்ரீ வி. ஸ்ரீனிவாஸன், செ. ச. பெரிய திருவடி) | 61 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். என். எஸ். மணி, திருச்சி | 35 | 0 | 0 |
| ஸ்ரீ சங்கரலால் ராட்டைத் தொழிலாளர் தொண்டர்கள், காந்திநகர், திருப்பூர் | 26 | 0 | 0 |
| ஸ்ரீ எம். கே. சுந்தரராமையர், சென்னை | 25 | 0 | 0 |

தமிழ்நாடு அகில இந்திய சர்க்கா சங்கக் காரியாலயத்தார், திருப்பூர் 25 0 0

ஸ்ரீ டி. வி. சுப்ரமணிய முதலியார், ஸ்வதேசி டைப் பௌண்டரி, சென்னை 25 0 0

ஸ்ரீ எம். ஏ. பிள்ளை, பம்பாய் 20 0 0

ஸ்ரீ எம். வி. அண்ணாமலை, கோல்டன் கம்பெனி, புதுச்சேரி 15 0 0

ஸ்ரீ ஜி. எல். லக்ஷ்மணன், கோபி 15 0 0

ஸ்ரீ வெ. ராமலிங்கம் பிள்ளை, நாமக்கல் 10 0 0

சந்திர விலாஸ், திருநெல்வேலி ஜங்ஷன் 10 0 0

ஸ்ரீ எம். எஸ். சுப்பையர், வாணி விலாஸ், திருநெல்வேலி ஜங்ஷன் 10 0 0

ஸ்ரீ ஏ. முத்து விநாயகம் பிள்ளை, பேட்டை, திருநெல்வேலி 10 0 0

பெர்ரி & கம்பெனி, உசிலம்பட்டி 10 0 0

மிஸஸ் கே. நாச்சம்மை, கெமத்தான் பட்டி 10 0 0

ஸ்ரீ ஆர். எம். குமாரஸ்வாமி, பல்லடம் 10 0 0

ஸ்ரீ ஏ. ராமலிங்கம், கல்கி ஏஜண்ட், வந்தவாசி 10 0 0

ஸ்ரீ ராஜ் அரியரத்னம், உதவி ஆசிரியர், "ஈழகேசரி" 10 0 0

வி. பிரேம்ஜி சங்கரலால் அண்டு ஸன், சேலம் 10 0 0

ஸ்ரீ ஏ. கே. ரங்காச்சாரியார், திருநாராயணபுரம் 10 0 0

ஸ்ரீ எஸ். டி. பொன்னம்பலநாத முதலியார், மேலகரம் 10 0 0

ராவ் சாகேப் வி. பி. சுப்ரமணிய முதலியார் அவர்கள், வெள்ளக்கால் 10 0 0

ஸ்ரீ ரா. அண்ணாமலை, தமிழ்ப்பண்ணை, சென்னை 10 0 0

ஸ்ரீ எஸ். வி. ராமஸ்வாமி, "கல்கி" ஏஜண்ட், பங்களூர் 10 0 0

ஸ்ரீ எஸ். ராமஸ்வாமி நாயுடு, "கல்கி" ஏஜண்ட், தென்காசி 10 0 0

பாரதி வாரக் கமிட்டி, திண்டுக்கல் 10—0—0

பின் வரும் அன்பர்கள் ரூ. 5—0—0 நன்கொடை அனுப்பியிருக்கிறார்கள் : ஸ்ரீமான்கள் வி. எஸ். வாஸன், திருநெல்வேலி; எஸ்.எஸ்.பி. சினியப்ப நாடார் & கம்பெனி, திருநெல்வேலி; டி. எம். கல்யாணராம ஐயர், தெப்பகுளம்; சாலிவாடீச்வர ஐயர், திருநெல்வேலி; வி. வெங்கடசுப்ப நரஸிம்மம், திருச்சி; ஏ. ஹரிகிருஷ்ண நைனார், மாயவரம்; சேதுராமன், கும்பகோணம்; எஸ். எம். முத்து, லால்குடி; எஸ். ஆர். சங்கர சுப்பய்யர், கீழக் கிராமம், கடையநல்லூர்; எம். ஏ. ஆய், காசிப்பாளையம்; கஸ்தூரிபா ஞாபகார்த்த வாசகசாலை, பனையூர்; எஸ். பிச்சை, கிரீன்பீல்ட், உதகமண்டலம்; என். நடராஜ முதலியார், கல்கி ஏஜன்ட், ஸ்ரீ வில்லிபுத்தூர்; குனிசேரி கே. சாமி ஐயர், வேலூர்; ஆர். எம். ஏ. கிருஷ்ணன், திருநெல்வேலி டவுன்; ஆர். கே. விசுவநாதன், எம். ஏ. அண்ணாமலை சர்வகலாசாலை; ஏ. ஆர். நாராயணர், செங்கோட்டை; கே. சுப்ரமணியம், பண்ணையூர்; ஹவில்தார் கிளார்க் ஏ. எம். ராமஸ்வாமி; கே. குப்புஸ்வாமி ஐயர், சென்னை; எஸ். ராஜு, டெல்லி; டி. ஆர். பார்த்தசாரதி, மதுரை; ஸெயிண்ட் மேரிஸ் போர்டிங் ஸ்கூல், மதுரை; என். எஸ். சுந்தரவரதன், மதுரை; கொடிமங்கலம் பாலுவையர், மதுரை; [illegible]. வி. வைத்தியநாத ஐயர், மதுரை; ஸ்ரீமதிகள் குரு அம்மாள், தூத்துக்குடி; ஆர். ராஜலக்ஷ்மி, மைசூர்; பத்மா ஸேதுமாதவன், திருச்சி.

ஆக, ரூ. 140—0—0

பின் வருபவர்கள் ரூ. 3—0—0 நன்கொடை யனுப்பியிருக்கிறார்கள் : ஸ்ரீமான்கள் என். சுந்தரராஜ ஐயர், மதுரை; திண்டுக்கல் வீணை கிருஷ்ணமூர்த்தி ஐயர், மதுரை; எஸ். வைத்தியநாதன், எழும்பூர்; அ. க. நாகரத்னம், அரசம்பட்டி; ஆர். எஸ். வெங்கடராமன், டெல்லி; கல்லிடைக்குறிச்சி எஸ். சுப்ரமணியம், பனையூர்.

ஆக, ரூ. 18—0—0

ஸ்ரீ. வி. வி. நாராயணஸ்வாமி ஐயர், காரமடை 2—5—0

ரூ. 2—0—0 நன்கொடை அனுப்பியவர்கள் :—ஸ்ரீமான்கள் வி. கே. கிருஷ்ணஸ்வாமி, செங்கல்பட்டு; கே. வி. ஆறுமுகம், சென்னை; எம். கஸ்தூரி, திருநீர்மலை; எஸ். வி. ராமாச்சாரி, தண்டையார் பேட்டை; எம். எஸ். கிருஷ்ணமூர்த்தி, திருச்சி; எஸ். டி. ஆர். மாணிக்கம், ராமேஸ்வரம்; அ. சிதம்பர முதலியார், மதுரை; பி. எஸ். கோபால ஐயர், மதுரை; வி. ஜயராமன், மதுரை.

ஆக, ரூ. 18—0—0

ரூ. 1—0—0 நன்கொடை ரூ. 31.

ஏற்கனவே வசூல் ரூ. 1284—7—10

மொத்தம் ரூ. ... 2122—8—9

ஒரு ரூபாய் நன்கொடை அளித்தவர்களின் பெயர்கள் அடுத்த இதழில் வெளியாகும்.



# கச்சேரியில் குதூகலம்

சென்னை நகரில் வீடு வாசலற்ற அநாதை ஏழைகளுக்கு ஒரு விடுதி கட்டுவதற்காக நகர சபைக் கமிஷனர் ஸ்ரீ ஜேனுப் பெரு முயற்சி செய்து நிதி திரட்டி வருகிறார். மேற்படி நிதிக்காக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி நவம்பர் 5-ல் கவர்ன்மெண்ட் மாளிகை விருந்தினர் பாங்க்வெட் ஹாலில் நடைபெற்றது. மண்டபத்துக்குள்ளேயும் இரண்டு பக்கத்துத் தாழ்வாரங்களிலும் மகா பெருங் கூட்டம். கச்சேரியில் மொத்த வசூல் ரூ. 32,320.

வழக்கமான பக்க வாத்தியங்களோடு ஸ்ரீ வில்வாத்ரி ஐயரின் கடமும் சேர்ந்து அமோகமாய் நடந்த இந்தக் கச்சேரியின் மத்தியில், பாடகிக்குப் பல பெண்மணிகள் மாலை போட்டுக் கௌரவப் படுத்தினார்கள். கடைசியாக, ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதர் அவர்கள் தமது பாராட்டுதலைத் தெரிவிப்பதற்காகக் கையில் மாலையுடன் மேடையில் ஏறிய போது, சபையில் ஏக கரகோஷமும் குதூகலமும் ஏற்பட்டது. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியும் அந்தக் குதூகலத்தில் ஈடுபட்டுக் கரகோஷம் செய்யவே, மேடைமேல் இருந்தவர்களுக்கும் சபையிலிருந்தவர்களுக்கும் ஆனந்தம் பொங்கி விட்டது. எல்லாருடைய முகமும் மலர்ந்த போது மேடை மீதிருந்த பூவும் மலர்ந்தது; தம்புராவும் சிரித்தது!



# ஆடல் பாடல்



## "கர்நாடகம்"

கீழ்க் கண்ட கடிதம் இரண்டு வாரங்களுக்கு முன்பே வந்தது. பத்திரிகையில் இட வசதிக் குறைவினால் இவ்வளவு தாமதமாய் வெளியிடுகிறோம்:—

திருச்சிராப்பள்ளி,
31—10—44

"ஹரிதாஸ்" என்ற படத்தைப் பற்றித் தங்கள் "கல்கி" மலரில் விளம்பரம் செய்யப்பட்டிருந்ததால் அது நன்றாக இருக்கும் என்னும் முழு நம்பிக்கையுடன் போய்ப் பார்த்தேன். ஆனால் முழுதும் ஏமாற்றம்.

இதுகாறும் "......" "......" முதலியன போல் ஆபாசக் காட்சிகளுள்ள படங்கள் இருக்க முடியாதென்று எண்ணியிருந்தேன். ஆனால் "ஹரிதாஸ்" போல் ஒரு தமிழ்ப் படம் இது வரையில் வெளி வந்ததில்லை — இனி மேலும் வராது—என்றே நினைக்கிறேன்.

தாங்கள் இப்படம் "தமிழ் நாட்டையே ஒரு ஆட்டு ஆட்டிவிடும்" என்று எழுதியது மிகவும் உண்மையாகப் போயிற்று!

சிருங்கார நாட்டியம், உருக்கமான நடிப்பு முதலியவைகள் தாங்கள் கூறியபடி ஒன்றும் இல்லை. பெண் மக்கள் பார்ப்பதற்கு லாயக்கற்ற படம். தமிழ்ப் படங்கள்மீதே துவேஷத்தை வளர்க்கும் படமாக அமைந்திருக்கிறது.

பொக்கிஷம் போன்று போற்றிப் பாதுகாத்து வைக்கக் கூடிய மலரில் இதைப் போன்ற ஆபாசப் படங்களுக்கு இடமளித்து விமரிசனமும் எழுதி இருப்பது மிகவும் வருந்தத்தக்கதென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"கல்கி" அன்பன்,
ஜகந்நாதன்.

தீபாவளி மலரில் வெளியான குறிப்பு விமரிசனம் இல்லை என்பதை மேற்படி கடிதம் எழுதியவருக்கு முதலில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். "ஹரிதாஸ்" படம் தீபாவளியன்றுதான் வெளியாயிற்று. எனவே, தீபாவளி மலரில் வெளியான குறிப்பு அதற்கு முன்பே எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது வெளிப்படை. படத்தைப் பார்த்துவிட்டு எழுதப்படுவதுதான் விமரிசனம். எனவே, மேற்படி குறிப்பை விளம்பரம் என்று கொள்ளுதலே பொருத்தம்.

ஆனால், அதை முழுதும் விளம்பரம் என்றும் எடுத்துக் கொள்வதற்கில்லை. படத்தின் சொந்தக்காரர்கள் அதை எழுதிக் கொடுக்கவில்லை. கல்கி காரியாலயத்தில் எழுதப்பட்டதுதான். அந்த அளவுக்கு அதன் பொறுப்பை நாம் ஏற்றுக் கொள்கிறோம். அதாவது நமது பிசகை ஒப்புக் கொள்கிறோம்.

தமிழ்ப்பட உலகில் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் இணையற்ற முதன்மை ஸ்தானத்தை வகித்து வருவதால், அவர் நடிக்கும் படக் காட்சி யொன்றைக் "கல்கி" தீபாவளி மலரில் வெளியிட வேண்டுமென்று கருதினோம்.

மதுரை ராயல் டாக்கிக்காரர்கள் ஏற்கெனவே சிந்தாமணி, சக்குபாய், சகுந்தலா, சாவித்திரி முதலிய உயர்தரப் படங்களைக் கொண்டு வந்தவர்களாதலால், அவர்களுடைய இந்தப் படமும் உயர்தரமாயிருக்குமென்றும், ஆபாசம் என்று சொல்லக் கூடிய அளவுக்கு நிச்சயமாய்க் கீழே போகாதென்றும் நம்பினோம்.

இந்த நம்பிக்கை பொய்த்துப் போனது நமக்கு அளவில்லாத ஏமாற்றத்தையும் துக்கத்தையும் அளித்தன. படத்தைப் பார்த்ததும் நம்முடைய தவறு நமக்குப் புலனாயிற்று. அந்த மாதிரி விளம்பரக் குறிப்பை நாம் பிரசுரித்திருக்கக் கூடாது என்பதில் சந்தேகமில்லை. இனிமேல் இம்மாதிரி நம்பி மோசம் போவதில்லையென்று உடனேயே தீர்மானித்துக் கொண்டோம்.

* * *

"ஹரிதாஸ்" படத்தைப் பற்றி நாம் விமரிசனம் எழுதப் போவதில்லை. மற்றும் பல தமிழ்ப் படங்களைப்போல் அதுவும் விமரிசனத்துக்கு லாயக்கில்லாத படம் என்றே நாம் கருதுகிறோம். அதிலுள்ள ஆபாசக்

காட்சிகள் இல, ஏற்கெனவே தமிழ்ப் படங்களில் வெளியான ஆபாசங்களை யெல்லாம் தோற்கடித்து விடுகின்றன!

எனினும், படத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்க நேர்ந்து விட்டபடியால் ஒரு விஷயத்தில் நமது வருத்தத்தையும் வியப்பையும் வெளியிட வேண்டி யிருக்கிறது.

முதலில், ஸ்ரீ தியாகராஜ பாகவதரைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது. பாகவதர் தமிழ் நாட்டின் சமூக வாழ்வில் ஓர் உயர்ந்த ஸ்தானத்தை அடைந்திருக்கிறார். தமிழிசை இயக்கத்தில் ஒரு முக்கிய பிரமுகர் அவர். தமிழ் மக்களிடம் சிறந்த கௌரவத்தையும் ஆதரவையும் அடைந்தவர்.

எட்டயாபுரம் போயிருந்தபோது அவருடன் சிறிது நேரம் நான் நெருங்கிப் பழக நேர்ந்தது. நல்ல இலட்சியங்கள், ஸத்ஸங்கத்தில் விருப்பம், பெரியோர்களிடம் மரியாதை, தமிழ் அபிமானம் முதலிய பல உயர்ந்த பண்புகளை அவரிடம் கண்டேன். அப்படிப்பட்டவர் எதற்காக இம்மாதிரி ஆபாசக் காட்சிகளில் எல்லாம் நடிக்க இசைந்து தம்முடைய கௌரவத்தைத் தாமே கெடுத்துக் கொள்கிறார் என்பது எனக்கு விளங்கவே யில்லை.

பாகவதர் இப்போது சமூகத்தில் அடைந்திருக்கும் அந்தஸ்தை அவருடைய சங்கீதக் கலை ஒன்றைக் கொண்டே நிலை நாட்டிக் கொள்ளலாம். டாக்கித் திரையிலும்கூட அவருடைய அருமையான பாட்டும், ஸ்பஷ்டமான பேச்சுமே அவருக்கு வேண்டிய புகழையும் பெயரையும் நிச்சயமாக அளிக்கும். அப்படி யிருக்கும்போது, தம்முடைய அந்தஸ்துக்குப் பங்கம் விளைவிக்கக்கூடிய காட்சிகளில் அவர் ஏன் நடிக்க வேண்டும்?

அடுத்தபடியாக, நாயல் டாக்கிக்காரர்கள் விஷயத்திலும் எனது ஏமாற்றத்தைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. நாயல் டாக்கி சொந்தக்காரர்கள் ஐசுவரியவான்கள். இந்த டாக்கிகளில் பணம் வந்துதான் அவர்களுக்கு ஆக வேண்டும் என்பதில்லை. அவர்கள் சர்க்காருக்குக் கொடுக்கும் வரிப் பணத்தில் ஒரு சிறு பகுதிகூட இராது டாக்கிகளில் வரும் லாபம். அவர்கள் ஏன் இம்மாதிரி ஆபாசப் படத்துக்குப் பொறுப்பு வகிக்க வேண்டும்? மேலும் மேலும் உயர்ந்த படங்களாக எடுத்து மற்றவர்களுக்கு வழி காட்டுவதற்குப் பதிலாக, ஏன் இப்படி மேலே யிருந்து கீழே இறங்க வேண்டும்?

ஒருவேளை, நாயல் டாக்கி முதலாளிகள் படத்தைத் தாங்களே நேரில் கவனிக்க முடியாமல் இருப்பவர்களையே நம்பி விட்டதின் பலனாயிருக்கக் கூடும்.

அல்லது......இன்னொரு காரணம் ஊகிக்கலாம். அதைப் பற்றிக் கொஞ்சம் பீடிகையுடன் சொல்ல வேண்டும்.

"உலகம் என்பது உயர்ந்தோர்மாட்டே" என்பது பழமொழி. சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்தில் இருப்பவர்கள், படித்தவர்கள், பத்திரிகைச் செல்வாக்கு உடையவர்கள் எந்த வழியைக் காட்டுகிறார்களோ அதைத்தான் மற்றவர்களும் பின்பற்றுவார்கள். அவர்களுடைய நடை உடை பாவனை பழக்க வழக்கங்களை மற்றவர்களும் கைக்கொள்வார்கள். அவர்கள் கெட்ட வழியைக் காட்டி "இதுதான் நல்ல வழி" என்று சொல்ல ஆரம்பித்தால், மற்றவர்களும் அதையே பின்பற்றத் தொடங்குவது இயல்புதான்.

எனவே, ஒரு சமூகத்தை உயர்த்துவதும் அதைத் தாழ்த்திப் படுகுழியில் ஆழ்த்துவதும், அச்சமூகத்தில் படிப்பும் செல்வாக்கும் உள்ளவர்களைப் பொறுத்திருக்கிறது. அத்தகைய சக்தி பத்திரிகைகளுக்கும் அபாரமாக உண்டு.

சென்னையிலுள்ள பெரிய மனிதர்கள்—பத்திரிகைகளின் மூலமாய்ப் பொதுஜன அபிப்பிராயத்தை உருப்படுத்தச் சக்தி வாய்ந்தவர்கள்—ஆபாசமான டாக்கிகளை எடுப்பதும், அந்த ஆபாசங்களை மற்றவர்கள் "உயர்ந்த கலை" "சிறந்த டெக்னிக்" என்று சொல்லிப் பாராட்டுவதும் ஏற்பட்டிருக்கும்போது, மற்றவர்களும் அவர்களைப் பின்பற்றுவது இயல்பே யல்லவா? இன்னும் கேவலமான ஆபாசங்களை அவர்கள் பொறுக்கி எடுப்பதும், "இப்படிச் செய்தால்தான் படம் நன்றாய் ஓடும்" என்று நம்புவதும் இயற்கை யல்லவா?

இதுவரையில் ஓரளவு நல்ல டாக்கிகளையே எடுத்து வந்த நாயல் டாக்கிக்காரர்கள் இவ்வளவு ஆபாசம் நிறைந்த டாக்கி எடுக்க இறங்கியதற்கு, மேற்கூறியதே ஒருவேளை காரணமா யிருக்கலாம்.

காரணம் எதுவா யிருந்தாலும், மிகவும் வருத்தப்பட வேண்டிய காரியம் என்பதில் சந்தேகமில்லை.

* * *

வருத்தம் மட்டுமா? சில விஷயங்களை நினைத்தால் தமிழ் மக்களாகிய நாம் அவமானப்பட வேண்டியதாகவும் இருக்கிறது.

பாரத நாட்டுக்கு இது ஒரு மகத்தான சகாப்தம். மகாத்மா காந்தியின் சகாப்தம். உலகம் முழுவதிலுமுள்ள பெரியோர்கள், அறிஞர்கள், மகான்கள் எல்லாரும், உலகத்தின் முன்னேற்றத்திற்கு மகாத்மா காந்தி காட்டும் வழியையே நம்பி யிருக்கிறார்கள். தூய்மையான உயரிய இலட்சிய வாழ்வுக்கு உதாரணமாக மகாத்மாவையே எடுத்துக் காட்டுகிறார்கள். அதனால் பாரத நாடே ஒரு தனி மகிமை அடைந்திருக்கிறது. மிஸ் மேயோ முதலியவர்களின் அபத்தப் பிரசாரங்களினால்கூட அந்த மகிமைக்கு மாசு உண்டு பண்ண முடியவில்லை.

பாரத நாட்டிற்குள்ளே தமிழ்நாடு மற்ற எல்லாத் துறைகளிலும் பிற மாகாணங்களுக்குச் சமமாகவும் சில அம்சங்களில் அதிகமாகவும் முன்னேறி வருகிறது. இலக்கியம், சங்கீதம், நடனம், கல்வி வளர்ச்சி, பத்திரிகைப் பெருக்கம், தேசத்தொண்டு, தியாகம் ஆகியவற்றில் தமிழ்நாடு, மற்ற எந்த மாகாணத்துக்கும் குறைவு படவில்லை.

ஆனால், டாக்கித் தொழில் ஒன்றிலே மட்டுந்தான் தமிழ்நாடு இப்படி நாளுக்கு நாள் கேவலமாகத் தோன்று வருகிறது.

மனிதர்களை உயர்த்தித் தேவர்களாக்க வேண்டுமென்று பாரதியார் போன்ற மகான்கள் கனவு கண்டார்கள்.

தமிழ் டாக்கிகளோ மனிதர்களை மிருகங்களுக்கும் கீழான நிலைக்குக் கொண்டுபோக அதி தீவிர முயற்சி செய்து வருகின்றன.

காந்தி மகான் தமது தபோ பலத்தினாலும் இடைவிடாத பிரசாரத்தினாலும் பாரத மக்களின் வாழ்க்கையைத் தூய்மைப்படுத்த முயன்று வருகிறார்.

தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் அந்தத் தவம் பயன் படாமல் டாக்கிகள் செய்து வருகின்றன.

தூய்மைக்குப் பெயர்போன தமிழ் நாட்டுத் தாய்மார்களின் மனதை மாசு படுத்தி, சின்னஞ் சிறு குழந்தைகளின் பால் போன்ற உள்ளங்களில் விஷத்தை ஏற்றி, சமூக வாழ்க்கையின் வேரை வெட்டித் தீ மூட்டி வருகின்றன தமிழ் டாக்கிகள்.

தமிழ் மக்களின் வருங்கால நல் வாழ்க்கையில் சிரத்தை யுள்ளவர்கள் எல்லாருக்கும் இது கவலை தரக்கூடிய நிலைமை அல்லவா?

* * *

இவ்வளவு தூரம் துயரந்தரும் பயங்கர விஷயத்தைப் பற்றியே பேசிய பிறகு, உற்சாகந் தரக்கூடிய ஒரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன்.

சமீபத்தில் அதாவது தீபாவளி சந்தர்ப்பத்தில் வெளியான இரண்டு தமிழ் டாக்கிகளைப் பற்றி ஒரு பிரபல தமிழ் டாக்கி முதலாளியிடம் பேசிக் கொண்டிருந்தேன். கோயமுத்தூரில் அந்த இரண்டு படங்களும் சேர்ந்தாற்போல் வெளியிடப் பட்டன. "எந்த டாக்கிக்குக் கூட்டம் அதிகமாம்? உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன். அவர் ஒன்றைக் குறிப்பிட்டார். "அதற்கு ஏன் கூட்டம் அதிகம்? எந்த அம்சத்தில் அது உயர்ந்தது?" என்று கேட்டேன். "அதிலே இன்னொரு படத்தை விட ஆபாசம் குறைவா யிருக்கிறதாம்! அதனால்தான்!" என்று அவர் கூறிய பதில் எனக்கு மிகவும் உற்சாகத்தை யளித்தது. ஆபாசம் குறைவா யிருப்பதற்காக ஒரு டாக்கியில் கூட்டம் அதிகம் சேருகிற தென்றால், அது ஒரு நல்ல அறிகுறி யல்லவா? பொது ஜனங்களின் மனப் போக்கு சரியாகத்தான் இருக்கிற தென்பதற்கு அடையாள மல்லவா?

நாலு நாளைக்கு முன்பு சென்னை வாலாஜா ரோட் வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். பாரகன் தியேட்டரில் இன்னும் "பூம்பாவை" காட்டப்படுவதாகத் தெரிந்தது. இதுவும் எனக்கு மிகவும் உற்சாகத்தை யளித்தது.

"பூம்பாவை"யில் பிரபல நட்சத்திரங்கள் இல்லை; பிரமாதமான டெக்னிக் இல்லை. ஆனாலும் அது இத்தனை நாள் ஓடிக் கொண்டிருப்பதற்குக் காரணம் அது ஆபாசம் ஒன்று மில்லாத தூய்மையான படம் என்பதாகத்தான் இருக்கவேண்டும்! இதிலிருந்து, ஆபாசமற்ற தூய்மையான படங்களை — மற்ற அம்சங்களில் சாதாரணமா யிருந்தால் கூட — பொது ஜனங்கள் ஆதரிக்கிறார்கள் என்று ஏற்படுகிறது.

இவை யெல்லாம் நல்ல அறிகுறிகள் என்பதில் சந்தேகமில்லை. டாக்கி முதலாளிகளும், நடிகர் நடிகைகளும் கவனிக்க வேண்டிய அறிகுறிகள். யார் கவனித்தாலும் கவனிக்கா விட்டாலும் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். அவர் சமூகத்தில் இவ்வளவு உயர்ந்த பதவியையும் செல்வாக்கையும் அடைந்து விட்ட பிறகு, "ஹரிதாஸ்" படத்தில் உள்ளவை போன்ற ஆபாசக் காட்சிகளில் நடிக்க முடியாதென்று இனிமேல் கண்டிப்பாய் மறுத்துவிட வேண்டும்.

# சிவகாமியின் சபதம்

கல்கி

அத்தியாயம் 33

## மொட்டு வெடித்தது!

தடாகத்தில் ஒரு அழகிய தாமரை மொட்டு தண்ணீருக்கு மேல் தலை தூக்கி நின்றது. அதன் குவிந்த இதழ்களுக்குள்ளே நறுமணம் ததும்பிக் கொண்டிருந்தது. இரவெல்லாம் அந்த நறுமணம் வெளியில் வருவதற்கு முயன்று நாலாபுறமும் மோதிப் பார்த்தும் வெளியில் வர முடியாதபடியால் உள்ளுக்குள்ளேயே குமுறிக் கொண்டிருந்தது. அந்தத் தாமரை மொட்டுக்கும் அது மிக்க வேதனையளித்தது.

உதய நேரத்தில் நறுமணத்தின் குமுறலும் மோதலும் அதிகமாயின. திடீரென்று கீழ்வானத்தில் ஒரு ஜோதி தோன்றியது. உதய சூரியனின் அழகிளங் கிரணங்கள் தடாகக் கரையில் இருந்த விருக்ஷங்களின் இடையே நுழைந்து வந்து தாமரை மொட்டைத் தொட்டன. அந்த இனிய ஸ்பரிசத்தினால் மொட்டு சிலிர்த்தது; இதழ்கள் விரிந்தன. இரவெல்லாம் உள்ளே குமுறிக் கொண்டிருந்த நறுமணம் விடுதலையடைந்து தடாகத்தையும் தடாகக் கரையையும் வான வெளியையும் நிறைத்தது.

அவ்விதமாகவே, சிவகாமியின் இதயமாகிற தாமரை மொட்டுக்குள் இத்தனை நாளும் குமுறிக் கொண்டிருந்த எண்ணங்களும் உணர்ச்சிகளும் மாமல்லரிடம் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்ததும், கரையை உடைத்துக் கொண்ட ஏரி வெள்ளத்தைப் போல் பிரவாகமாய்ப் பெருகின. மாமல்லர் முதன் முதலில் அரண்ய வீட்டுக்கு வந்ததைக் குறிப்பிட்ட போதுதான் சிவகாமியின் வார்த்தைப் பிரவாகம் சிறிது தடைப்பட்டதாகத் தோன்றியது.

அந்த சந்தர்ப்பத்தை மாமல்லர் பயன்படுத்திக் கொண்டு கூறினார்:— "ஆம், சிவகாமி! எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது. நானும் சக்கரவர்த்தியும் முதன் முதலில் உங்கள் அரண்ய வீட்டுக்கு வந்தபோது, உன் தந்தையின் தெய்வச் சிலைகளுக்கு மத்தியிலே நீ நடனமாடிக் கொண்டிருந்தாய். ஆயனர் ஸ்வரக் கோவை பாடிக் கொண்டும் தாளம் போட்டுக் கொண்டும் இருந்தார். எங்களைக் கண்டதும் ஆயனர் பாட்டையும் தாளத்தையும் நிறுத்தினார். நீயும் ஆட்டத்தை நிறுத்தினாய். உன்னுடைய விரிந்த கண்களை இன்னும் மலர்ந்து விழித்து எங்களை நோக்கினாய். என் தந்தை, 'நிறுத்த வேண்டாம்; ஆட்டம் நடக்கட்டும்!' என்று வற்புறுத்தினார்.

அதன்மேல் ஆயனர் பாடத் தொடங்க, நீயும் ஆடத் தொடங்கினாய்! ஆட்டம் முடிந்ததும் அளவில்லாத குதூகலத்துடன் நான் பலமாகக் கரகோஷம் செய்தேன். நீ



மகிழ்ச்சி ததும்பிய கண்களினால் என்னை ஏறிட்டுப் பார்த்தாய். அந்தப் பார்வையில் நாணம் என்பது அணுவளவும் இருக்கவில்லை......"

"ஆம், பிரபு! தாங்கள் கூறியதெல்லாம் உண்மைதான். அப்போது நான் பன்னிரண்டு பிராயத்துப் பெண். உலகம் அறியாதவளாயிருந்தேன். தாங்கள் வானத்தில் ஜோதிமயமாய்ப் பிரகாசிக்கும் சூரியன் என்பதையும், நான் கேவலம் பூமியில் புல் நுனியில் நிற்கும் பனித்துளி என்பதையும் அறியாதவளாயிருந்தேன். ஆகையினால், தங்களை ஏறிட்டுப் பார்க்கச் சிறிதும் தயக்கமடையவில்லை. சூரியனை ஏறிட்டுப் பார்க்கத் துணியும் கண்கள் கூடிய சீக்கிரத்தில் கூசிக் குனிய நேரிடுமென்றும், குனியாவிட்டால் கண்ணே குருடாகி விடுமென்றும் அறியாமல் போனேன்!..."

"சிவகாமி! இதென்ன மறுபடியும் இப்படி ஆரம்பித்து விட்டாய்? நான் சூரியனுமல்ல; நீ பனித்துளியுமல்ல. நீ தீபச் சுடர்; நான் அதைச் சுற்றிச் சுற்றி வரும் விட்டில்! நீ பூரண சந்திரன்; நான் சந்திரனைப் பிடிக்க வரும் ராகு, கேது!......"

"பிரபு! நான் சொல்ல ஆரம்பித்ததை விட்டு வேறு விஷயத்துக்குப் போனது தவறுதான். மன்னியுங்கள். நான் ஆடி நிறுத்தியதும் நீங்கள் கரகோஷம் செய்தீர்கள். எனக்கு அப்போது உண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஏனோ உங்கள் அருகில் வரவேண்டுமென்றும், உங்களுடன் பேசவேண்டுமென்றும், உங்களை அழைத்துக் கொண்டு போய்க் காட்டிலே நான் அருமையாகப் பார்த்து வைத்திருக்கும் அழகான இடங்களையெல்லாம் காட்ட வேண்டுமென்றும் எனக்குத் தோன்றியது. அதற்குத் தகுந்தாற்போல், உங்கள் தந்தையும் உங்களைப் பார்த்து, 'சிவகாமியோடு சற்று நேரம் விளையாடிக்கொண்டிரு; ஆயனரோடு பேசியான பிறகு உன்னைக் கூப்பிடுகிறேன்' என்றார். நீங்கள் உடனே என் அருகில் வந்தீர்கள். இருவரும் கைகோத்துக் கொண்டு காட்டுக்குள்ளே குதித்தோடினோம்.

காட்டிலே நான் பார்த்து வைத்திருந்த அழகான இடங்களையும் செடி கொடிகளையும் காட்டியான பிறகு தங்களை வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்று நான் வளர்த்துவந்த கிளிகளையும் புறாக்களையும் காட்டினேன். பிறகு என் தந்தை செய்து வைத்திருந்த சிலைகளையெல்லாம் காட்டத் தொடங்கினேன். நடன வடிவச் சிலைகளைப் பார்க்கும்போது தாங்கள், 'நானும் நடனக் கலை பயில விரும்புகிறேன்' என்றீர்கள். அந்தச் சிலைகளில் ஒன்றைப்போல் அபிநயத் தோற்றத்தில் நின்றீர்கள். அதைப் பார்த்து விட்டு நான் கலீரென்று சிரித்தேன். 'குழந்தைகள் அதற்குள்ளே வெகு சிநேகமாகி விட்டார்களே!' என்று நம் தந்தைமார்கள் பேசிக் கொண்டார்கள்.

அன்று முதல் தங்களுடைய வருகையை நான் ஆவலுடன் எதிர்பார்க்கலானேன். குதிரைகள், ரதங்களின் சத்தம் கேட்கும் போதெல்லாம் தாங்கள் தான் வந்து விட்டீர்கள் என்று என் உள்ளம் துள்ளி மகிழ்ந்தது. அந்த நாளில், உதய சூரியனையும், பூரண சந்திரனையும், வண்ண மலர்களையும், பாடும் பறவைகளையும், பறக்கும் பட்டுப் பூச்சிகளையும் பார்க்கும்போது எனக்குண்டாகும் குதூகலம் தங்களைப் பார்க்கும் போதும் உண்டாயிற்று. ஆனால் சூரிய சந்திரர்களிடமும், புஷ்பங்கள் பட்சிகளிடமும் பேச முடியாது; என் அந்தரங்க எண்ணங்களை வெளியிட முடியாது. தங்களிடம் பேசுவது சாத்தியமாயிருந்தபடியால், தங்களைக் கண்டதும் பேச ஆரம்பித்தவள் திரும்பிப் போகும் வரையில் மூச்சு விடாமல் பேசிக் கொண்டேயிருப்பேன்......"

"உண்மைதான், சிவகாமி! அந்த நாளில் உன்னைப் பார்க்கும் போது, உன் தந்தையின் அற்புதச் சிலைகளில் ஒன்றைப் பார்ப்பது போன்ற மகிழ்ச்சி எனக்கும் உண்டாகும். ஆனால் சிலை பேசாது; நீயோ ஓயாமல் பேசுவாய். கிளிகளின் மழலையையும் குயிலின் கூவலையும் கேட்டு மகிழ்வதுபோல் உன்னுடைய பேச்சைக் கேட்டு நான் மகிழ்வேன். பறவைகளின் குரல் ஒலிகளில் எவ்

வளவு பொருள் உண்டோ, அவ்வளவு பொருள்தான் உன் பேச்சுக்களிலும் இருப்பதாக எனக்குத் தோன்றும். ஒன்றும் புரியாமலே நெடுநேரம் கேட்டுக் கொண்டிருப்பேன்......"

"என் பேச்சைப் போலவேதான் நமது சிநேகமும் அப்போது அர்த்தமற்றதாயிருந்தது. கொஞ்ச நாளைக்கெல்லாம், தாங்கள் சக்கரவர்த்தியுடன் தேச யாத்திரை சென்றீர்கள். அப்புறம் மூன்று வருஷ காலம் அரண்ய வீட்டுக்கு நீங்கள் வரவில்லை. இந்தக் காலத்தில நான் உங்களுடைய முகத்தை அடியோடு மறந்து விட்டேன். தங்களுடைய முகம் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்த்தால்கூட மனதில் வருவதில்லை......"

"ஆ! கள்ளி! உன்னுடைய கபட நாடகம் இப்போதல்லவா வெளியாகிறது? அந்த மூன்று வருஷமும் என்னையே நினைத்து நினைத்து உருகிக் கொண்டிருந்ததாகத் தாமரைக் குளக் கரையில் நீ பாசாங்கு செய்யவில்லையா! அந்த மூன்று வருஷமும் உன்னை வந்து பாராமல் இருந்து விட்டதற்காக என்னுடன் நீ பெரிய சண்டை பிடிக்கவில்லையா?"

"ஐயா! தங்களுடைய முகத்தை மறந்து விட்டதாகத்தானே சொன்னேன்? தங்களை மறந்து விட்டதாகச் சொல்லவில்லையே?......"

"ஓஹோ! அப்படியா தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறாய்?"

"வனத்தின் மத்தியிலிருந்த ஏழைப் பெண்ணின் வீடு தேடி வந்து என்னுடன் சிநேகம் பூண்ட பல்லவ குமாரரை நான் எப்படி மறக்க முடியும்? மறுபடியும் எப்போதுமே தங்களைப் பார்க்க மாட்டோமோ என்ற ஏக்கம் எனக்குச் சிற்சில சமயம் உண்டாகும். இல்லை. எப்படியும் ஒரு நாள் வருவீர்கள் என்று தைரியம் அடைவேன். தாங்கள் வருவதற்குள்ளே நடனக் கலையிலே பிரமாதமான தேர்ச்சியடைந்துவிட வேண்டுமென்றும், தாங்கள் திரும்பி வந்ததும் அற்புதமாய் ஆட்டம் ஆடித் தங்களைத் திகைக்கச் செய்ய வேண்டுமென்றும் எண்ணுவேன். அந்த மூன்று வருஷமும் நடனக் கலைதான் என் உள்ளத்தை முழுக்க முழுக்கக் கவர்ந்திருந்தது. தாங்கள் வரவில்லையே என்ற ஏக்கத்தை மறப்பதற்கும் உதவியாயிருந்தது. தாங்கள் மீண்டும் வரும்போது தங்களுடைய உருவம் எப்படியிருக்குமென்று கற்பனை செய்து பார்க்க அடிக்கடி முயல்வேன். ஆனால் மனதில் உருவம் எதுவுமே வராது... கடைசியாக, ஒரு நாள், தாங்களே வந்து விட்டீர்கள்! முற்றும் புதிய மனிதராய் வந்தீர்கள். பழைய குமார சக்கரவர்த்தி நரசிம்ம வர்மருக்கும், இப்போது வந்த வீர மாமல்லருக்கும் வித்தியாசம் ரொம்ப இருந்தது......"

"நீயும் வெகுவாக மாறிப் போயிருந்தாய், சிவகாமி! உருவத்திலும் மாறியிருந்தாய்; குணத்திலும் மாறியிருந்தாய். எங்கிருந்தோ அசாத்தியமான நாணம் வந்து உன்னைப் பற்றிக் கொண்டிருந்தது. நான் எதிர் பார்த்தது போல் என்னைக் கண்டதும் நீ ஓடி வந்து என் கரங்களைப் பற்றி வீட்டுக்குள் என்னை அழைத்துப் போகவில்லை. தூண் மறைவிலே நாணிக் கோணிக் கொண்டு நின்று கடைக் கண்ணால் என்னைப் பார்த்தாய். கலகலவென்று சிரிப்பதற்கு மாறாகப் புன்முறுவல் செய்தாய்! அந்தக் கடைக்கண் பாணமும் கள்ளப் புன்னகையும் என்னைக் கொன்றது!"

"ஓடி வந்து முகமன் கூறி உங்களை வரவேற்க முடியாமல் ஏதோ ஒன்று என்னைத் தடை செய்தது. முன்னால் வரலாமென்றால் கால் எழவில்லை; ஏதாவது பேசலாமென்றால் நா எழவில்லை. நின்ற இடத்திலேயே நின்றேன். என்னை நானே 'சிவகாமி! உனக்கு என்ன வந்துவிட்டது?' என்று கேட்டுக் கொண்டேன். அந்த சமயத்தில் அப்பாவும் 'சிவகாமி! ஏன் தூண் மறைவில் நிற்கிறாய்? வந்து சக்கரவர்த்திக்கு நமஸ்காரம் செய்! பல்லவ குமாரரைப் பார்! எப்படி ஆஜானுபாகுவாய் வளர்ந்திருக்கிறார்?' என்றார். நான் தயக்கத்துடன் வந்து நமஸ்காரம் செய்தேன். அப்போது சக்கரவர்த்தி 'ஆயனரே! சிவகாமியும் வளர்ந்துதானிருக்கிறாள்! முதலில் அவளைப் பார்த்ததும் எனக்கு அடையாளம் தெரியவில்லை. கற்சிலை செய்வதோடு நீர் தங்கச்சிலையும் செய்ய ஆரம்பித்து விட்டீரோ என்று நினைத்தேன்'



என்றார். இதனால் என்னுடைய நாணம் இன்னும் அதிகமாகி விட்டது. சற்று நேரம் பேசாமல் நின்று விட்டு அப்புறம் வீட்டிலிருந்து நழுவிக் காட்டுக்குள்ளே சென்றேன். தாமரைக் குளக் கரையில் உட்கார்ந்து எனக்கு என்ன வந்து விட்டது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்......"

"கள்ளத்தனமாக ஒரு காரியம் செய்வது என்பது அப்போதுதான் எனக்கும் முதன் முதலாகத் தெரிந்தது. நீ போவதைப் பார்த்து விட்டு நானும், தந்தைமார்கள் கவனியாதபோது மெதுவாக வீட்டை விட்டு வெளியேறினேன்......"

"சற்று நேரத்துக்கெல்லாம் என் பின்னால் மிருதுவான காலடிச் சத்தம் கேட்டது. ஆனால் நான் திரும்பிப் பார்க்கவில்லை. தாங்கள் வந்து என் கண்களைப் பொத்தினீர்கள். மூன்று வருஷத்துக்கு முன்னால் இப்படிக் கண்களைப் பொத்தும் போது நான் உங்கள் பெயரைச் சொல்லிக் கலகலவென்று சிரித்துக் கைகளைத் தள்ளி விட்டுத் திரும்பிப் பார்ப்பேன். இப்போது தங்களுடைய கரங்கள் என் கண்களை மூடியபோது, என் தேகம் செயலற்று ஸ்தம்பித்தது. என் உள்ளத்திலோ ஆயிரக் கணக்கான அலைகள் எழும்பி விழுந்து அல்லோல கல்லோலம் செய்தன.

பிறகு நீங்கள் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து என் கையை உங்கள் கையோடு கோர்த்துக் கொண்டீர்கள். கையை இழுத்துக் கொள்ள வேண்டுமென்ற உணர்ச்சியும், வேண்டாமென்ற உணர்ச்சியும் என் உள்ளத்தில் போரிட, நான் செயலற்றுச் சும்மா இருந்தேன். 'சிவகாமி! என் பேரில் கோபமா?' என்றீர்கள். நான் மௌனமாய் உங்களைப் பார்த்தேன். 'ஆமாம், கோபம் தான் போலிருக்கிறது' என்று கூறி, என்னவெல்லாமோ சொன்னீர்கள். மூன்று வருஷமும் நீங்கள் யாத்திரை செய்தது பற்றி ஏதேதோ சொல்லிக் கொண்டே போனீர்கள். ஆனால், நீங்கள் சொன்னது ஒன்றும் என் காதில் ஏறவே யில்லை. 'நீங்கள் என் அருகில் உட்கார்ந்திருக்கிறீர்கள்; நம் இருவருடைய கரங்களும் ஒன்றுபட்டிருக்கின்றன' என்னும் ஒரு உணர்ச்சி — ஒரு நினைவு தான் — என் மனதில் இருந்தது. அந்த நினைவு என்னை வான வெளியிலே தூக்கிக்கொண்டு போய் மேக மண்டலங்களின்மேல் மிதக்கச் செய்தது. தடாகத்துத் தண்ணீரில் மிதந்த தாமரை இலைகளின்மேல் நின்று என்னை நடனமாடச் செய்தது. தண்ணீருக்குள்ளே அமுக்கிக் கீழே கீழே கீழே கொண்டு போய் மூச்சு விட முடியாமல் திக்கு முக்காடச் செய்தது!......"

"என்ன அசடாக என்னைச் செய்து விட்டாய் நீ! நான் சொன்னதையெல்லாம் நீ வெகு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்ததாக எண்ணியல்லவா என் யாத்திரை அநுபவங்களை யெல்லாம் உனக்குச் சொல்லிக் கொண்டிருந்தேன்?"

"கடைசியாக, நீங்கள் விடை பெற்றுக் கொண்டு சென்றபோது, 'மறுபடியும் எப்போது

வருவீர்கள்?" என்று கேட்டேன். 'சீக்கிரத்தில்' என்று சொல்லி விட்டுச் சென்றீர்கள். அப்புறம் சிலகாலம் நான் தரையிலே நடக்கவே யில்லை. ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டே யிருந்தேன். என் வாழ்க்கையில் ஒரு மகத்தான அதிசயம்—அபூர்வமான புதுமை—யாருக்கும் கிடைக்காத அற்புதமான பாக்கியம் கிடைத்து விட்டதாகத் தோன்றியது. அதனால் என் கண்களுக்கு உலகமே புதிய தோற்றம் கொண்டது. வானத்திலும் பூமியிலும் அதுவரை காணாத வனப்புகளையெல்லாம் கண்டேன். மல்லிகையும் முல்லையும் செண்பகமும் அதற்கு முன் நான் என்றும் அறியாத நறுமணத்தை அளித்தன. நீல வானம் புதிய மெருகுடன் பிரகாசித்தது. பட்சிகளின் கானத்தில் புதிய இனிமை தென்பட்டது. மூங்கில் காடுகள் காற்றில் அசையும்போது உண்டாகும் சத்தம் முன்னெல்லாம் அழுகைச் சத்தமாக எனக்குத் தோன்றும். இப்போது அதுவே ஆனந்த கீதமாக என் காதில் ஒலித்தது. செடிகளும் கொடிகளும் பட்சிகளும் பூச்சிகளும் ஆயிரம் ஆயிரம் குரல்களில், 'சிவகாமி! நீ கொடுத்து வைத்தவள்; பாக்கியசாலி' என்று ஆதரவோடு சொல்வதாகத் தோன்றியது. இரவிலே வானத்து நட்சத்திரங்கள் முன் எப்போதையும் விடக் குதூகலமாக என்னைப் பார்த்துச் சிரித்தன. வெண்மதியாகிய தந்தத் தோணியின்மேல் அமர்ந்து வானக் கடலில் அந்த விண்மீன்களிடையே சுற்றி வந்தபோது, இப்போது நான் தனியாகச் சுற்றவில்லை; தோணியில் என் அருகில் நீங்களும் வீற்றிருந்தீர்கள்! எல்லையற்ற உள்ளக் கடலிலே தாலாட்டிய அலைகளுக்கு மத்தியில் மிதந்த பாலைத் தெப்பத்தில் நான் மட்டும் தனியாக இருக்கவில்லை; பக்கத்தில் தாங்களும் இருந்தீர்கள். அப்போதெல்லாம் எனக்குத் தானாகவே பாட்டுப் பாட வந்தது. ஆட்டத்தில் அளவில்லாத உற்சாகம் உண்டாயிற்று. நடனக் கலையில் நான் அடைந்த துரிதமான அபிவிருத்தியைக் கண்டு என் தந்தையே பிரமித்துப் போனார்......"





"சக்கரவர்த்தியும் நானும் கூடத்தான் அளவில்லாத அதிசயத்தை அடைந்தோம். 'பரத சாஸ்திரம் எழுதிய முனிவருக்கே எட்டாத வித்தைகளெல்லாம்' உன் ஆட்டத்தில் வெளியாவதாக என் தந்தை அடிக்கடி சொன்னார். காஞ்சியில் அரங்கேற்றம் நடத்த வேண்டும் என்று அவர்தான் வற்புறுத்தினார்!"

"பிரபு! அந்த துரதிர்ஷ்டம் பிடித்த அரங்கேற்றம் நடக்கும் சமயத்திலெல்லாம் என் மனோநிலை மாறி விட்டது. அந்த மாறுதலை நினைத்தால் எனக்கே அதிசயமாயிருக்கிறது. அதன் காரணமும் எனக்கு இன்னமும் விளங்காத மர்மமாய்த்தானிருக்கிறது.



மூன்று வருஷப் பிரிவுக்குப் பிறகு தங்களைப் பார்த்ததும் எனக்குண்டான சந்தோஷம், குதூ

கலம் எல்லாம் சில காலத்துக்குள் எங்கேயோ போய் விட்டன. வரவர, தங்களுடைய நினைவு எனக்கு மகிழ்ச்சியை அளிப்பதற்கு மாறாகத் துன்பத்தைத் தர ஆரம்பித்தது. ஒவ்வொரு தடவையும் தாங்கள் வந்து விட்டுப் போன பிறகு, துன்பம் அதிகமாயிற்று. சில காலத்துக்கெல்லாம் என் நெஞ்சையே வலிக்க ஆரம்பித்து விட்டது. எதைப் பார்த்தாலும் பிடிக்காமல் போய் விட்டது. சந்திரனும் நட்சத்திரங்களும் வெறுப்பை அளிக்கத் தொடங்கின. பொழுது விடிந்தால் ஏன் விடிகிறது என்று தோன்றியது. இரவு வந்தால், ஏன் இருட்டுகிறது என்று தோன்றியது. பூக்களைக் கண்டால் கசக்கி எறியத் தோன்றியது. என் கண்களிலிருந்து தூக்கம் மாயமாய்ப் போய்விட்டது. அருமையாக வளர்த்த மான் குட்டியையும் கிளியையும்கூட வெறுக்கத் தொடங்கினேன். இதை யெல்லாம் விட என் மனோ நிலையில் ஏற்பட்ட மோசமான மாறுதல் என்ன வென்றால், நடனக் கலையிலேகூட எனக்கு ஆசை குன்றத் தொடங்கியது. 'ஆட்டமும் பாட்டமும் என்ன வேண்டிக் கிடக்கிறது?' என்று எண்ணத் தொடங்கி விட்டேன்.........இந்த சமயத்திலேதான் அரங்கேற்றம் நடந்தது; அபசகுனம் போல் அது நடுவில் நின்று போனதில் எனக்குத் திருப்தியே உண்டாயிற்று......."

"அரங்கேற்றத்துக்குப் பிறகு தாமரைக் குளக் கரையில் சந்தித்த போதும் நீ ஒரு மாதிரி வருத்தத்துடனேதான் பேசினாய். என்னிடம் வாக்குறுதி கேட்டாய்! எனக்கு அதெல்லாம் வியப்பா யிருந்தது......"

"பிரபு! அச்சமயம் தங்களுடைய திருமணத்தைப் பற்றிய பிரஸ்தாபம் என் காதில் விழுந்தது. ஏற்கெனவே வேதனைக் குள்ளாயிருந்த என் உள்ளத்தில் அது வேலினால் குத்துவது போலிருந்தது. தாங்கள் எனக்கே முழுதும் உரியவரா யிருக்க வேண்டுமென்று கருதினேன். தங்களைப் பார்க்காமல் ஒரு கணம் போவது ஒரு யுகமா யிருந்தது. என்னுடைய தூண்டுதலினாலேதான் ஆயனர் காஞ்சிக்கு நாவுக்கரசர் பெருமானைப் பார்ப்பதற்கு வந்தார். நானும் அவர் கூட வந்தேன். தங்களை எப்படியும் பார்க்கலாம் என்ற ஆசையினால்தான்! அன்று நடந்ததைத் தாங்கள் அறிவீர்கள்......"

"அன்று நடந்ததை மட்டும் அல்ல, சிவகாமி! உன் உள்ளத்தின் நிலைமையையும் ஒருவாறு தெரிந்துகொண்டேன். அதனால் மறுநாளே கண்ணபிரானிடம் ஓலை கொடுத்து அனுப்பினேன்......"

"அந்த ஓலையிலிருந்து நான் காஞ்சிக்கு வருவது தங்களுக்கு விருப்பமில்லையென்று அறிந்தேன். தாங்களும் என்னை வந்து பார்க்க முடியாமல் போயிற்று. பிரபு! இவ்விதம் தங்களைப் பார்க்காமல் நான் கழித்த எட்டு மாதமும் எனக்கு எட்டு யுகமா யிருந்தது. நாளுக்கு நாள் என் மனவேதனையும் நெஞ்சு வலியும் அதிகமாகி வந்தன. தங்களிடமிருந்து ஓலை வந்த இரண்டொரு தினங்கள் சிறிது உற்சாகமா யிருப்பேன். பிறகு துன்பம் அதிகமாகி விடும். தங்களை ஒரு நாளும் இனிப் பார்க்கப் போவதில்லையென்றும், என்னுடைய பகற் கனவு ஒரு நாளும் நிறைவேறப் போவதில்லையென்றும் தோன்றும். 'இப்படி எதற்காக உயிர் வாழ வேண்டும்? இந்த வாழ்நாளை முடித்துக் கொள்ளலாம்' என்று அடிக்கடி எண்ணமிடத் தொடங்கினேன். இப்படியே கொஞ்ச நாளிருந்தால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடலாம் என்றும் அடிக்கடி தோன்றியது...... இவ்வளவுதான் என் கதை. உங்களுடைய விருப்பத்தின்படி ஆரண்ய வீட்டிலேயே காத்திராமல் ஏன் யாத்திரை கிளம்பி வந்தேன் என்று இப்போது தெரிகின்றதா?" என்று சிவகாமி முடித்தான்.

"தெரிகிறது, சிவகாமி! தெரிகிறது! இப்படி வெள்ளத்திலே அகப்பட்டுக் கொண்டு இரண்டு பேரும் திண்டாட வேண்டும். இந்த ஜன சூன்யமான ஏகாந்தத் தீவிலே வந்து ஒதுங்க வேண்டும் என்பதற்காகத்தான்! இது தெரியாதா, என்ன?" என்று மாமல்லர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவருடைய வார்த்தையைப் பொய்ப் படுத்திக் கொண்டு சற்றுத் தூரத்தில் வாத்திய கோஷங்கள் கேட்டன. ஜனங்களின் ஆரவார ஒலியும் அத்துடன் கலந்து வந்தது. இருவரும் திடுக்கிட்டு எழுந்திருந்தார்கள்.



## இப்போது சேமிக்கப்படும் ஒவ்வொரு ரூபாயும் . . .

யுத்தம் நின்றவுடன் அதிகப் பொருள் வாங்க உதவும். இப்போதுள்ள உயர்ந்த விலையில், நாம் கொடுக்கும் தொகைக்குத் தகுந்த அளவு பொருள்கள் கிடைப்பதில்லையென்று சாதாரண அறிவு படைத்தவர்களுக்குக் கூடத் தெரியும். அன்றியும் விலைகள் குறைந்து கொண்டு வருகின்றன என்பதை நினைவில் வையுங்கள். ஒரு வருஷத்திற்கு முன்பு, துணி, உணவு தானிய வகைகள், மருந்து வகைகள் ஆகியவற்றின் விலைகளையும், இப்போது அவை விற்கும் விலைகளையும் ஒப்பிட்டுப் பாருங்கள். அறிவாளி, பணத்தைச் சேமித்தான். ஆகவே, முன்னைவிட இப்போது குறைந்த விலைக்கு வாங்கக் கூடும். இப்போது இயன்றவரை சேமித்து சமாதானம் மீண்டும் ஏற்பட்ட பிறகு, உங்கள் பணத்தைக் கொண்டு இரண்டு மடங்கு பொருட்கள் வாங்குவதுதான், எல்லாவற்றைவிட மகா புத்திசாலித்தனமான காரியம்.

நீங்கள் சேர்த்து வைக்கும் தொகையை பந்தோபஸ்தான வகையில் முதலீடு செய்கிறோமா என்பது பற்றி நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள். இந்தக் காலத்தில் நகைகள், நிலம், கட்டடங்கள், செப்பொருட்கள், பண்டங்கள் முதலியவற்றின் மேல் போட்டு வைக்கும் தொகைகளால் கஷ்டந்தான். அவற்றின் விலைகள் அளவிற்கு மீறி அதிகமாயிருக்கின்றன. அவை என்றைக்காவது இறங்கத்தான் செய்யுமென்பது நிச்சயம்.

பத்திரமாயிருக்கும் பொருட்டும், தக்க பலனளிக்கும் பொருட்டும், பணத்தை, அரசாங்க கடன் பத்திரங்களிலும் நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளிலும், இன்ஷூரென்ஸ்களிலும், கூட்டுறவுச் சங்கங்களிலும், தபாலாபீஸ் சேமிப்பு நிதியிலும் போட்டு வையுங்கள்.

## உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள்.

## மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

**தேசியப் போர்முனையார் விடுக்கும் தேசிய வேண்டுகோள்**

AAA 1113 TM




## 84. அப்படி நினைக்கலாமா லக்ஷ்மணனை!

ராமனைத் தொலைத்து விடவே பரதன் வருகிறான் என்பதாக லக்ஷ்மணன் எண்ணிவிட்டான்.

"பரதனைக் கொல்லப் போகிறேன். அது காரணமாகக் கைகேசி விழுந்து விழுந்து அரற்றப் போகிறாள்" என்று லக்ஷ்மணன் சொன்னான். ராமனுக்கு இந்த வார்த்தைகளைச் சகிக்க முடியுமா? முடியவில்லை. ஆனாலும் லக்ஷ்மணனது கோபத்தை எப்படி ஆற்றுவது என்று தெரியவில்லை. கொஞ்சம் யோசனை செய்து பக்குவமாகப் பேச ஆரம்பிக்கிறான்.



"என் அந்தப் பால்காரன் பையனுடன் சண்டை போடுகிறான்? பையன் பாலைக் கொட்டிவிட்டானா என்ன?"

"இல்லை, இல்லை! தண்ணீரைத்தான் கீழே கொட்டிவிட்டானாம்!"

தம்பி, லக்ஷ்மணா! உன்னுடைய வீரம் இன்னதென்று எனக்குத் தெரியாதா? பதினாலு உலகங்களையும் கலக்குவேன் என்று எண்ணி விட்டாயானால் யார் தான் உன்னைத் தடுக்க முடியும்? ஆனாலும் ஒரு வார்த்தை:

'இலக்குவ! உலகம்ஓர்
ஏழும் ஏழும், நீ
கலக்குவை என்பது
கருதி னால், அது
விலக்குவ(து) அரி(து), அது
விளம்பல் வேண்டுமோ?—
புலக்குரித்(து) ஒருபொருள்
புகலக் கேட்டியால்?

[புலக்குரித்து ஒரு பொருள் புகலக் கேட்டியால்: யோசனைக்கு உரியதான ஒரு விஷயத்தை நான் சொல்லுகிறேன் கொஞ்சம் கேள்.]

ராமன் சொல்லுகிறான்: நம்முடைய முன்னோர்கள் எந்த விதமான குற்றமும் இல்லாதவர்கள் அவர்கள். அவர்களுடைய தொகையை எண்ணிப்பார்த்தால் முடிவே இல்லை.

'நம்குலத்(து) உதித்தவர்
நவையின் நீங்கினர்

எங்குலப்(பு) உறுவர்கள் ;—
எண்ணில், யாவரே

நம்குலத்(து) ஒருவரும்
தருமம் நீங்கினர்?

பொங்குலத் திரளொடும்
பொருத தோளினாய்!'

[நவையின் நீங்கினர் : குற்றங்களை விட்டு நீங்கிப் புனிதமாய் உள்ள முன்னோர்கள் : எங்கு உலப்பு உறுவர்கள் : அவர்கள் தொகை எங்கே முடிந்து நிற்கும் : எண்ணில் : யோசனை பண்ணினால் ; யாவரே தம் குலத்து ஒருவு அரும் தருமம் நீங்கினர் : தங்கள் சூரிய குலத்துக்கு உரியதாய் நீக்க முடியாததாயுள்ள தர்ம நெறியை விட்டு நீங்கினவர்கள் யார்தான் உண்டு : பொங்கு உலத்திரளொடும் பொருத தோளினாய் : பல பலவாகத் திரண்ட உலக்கைகளோடு எதிர் கொடுத்த வலிபெற்ற தோளையுடையவனே.]

ஏதோ வேதங்கள் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அவை அரிய நீதிகளை எடுத்துச் சொல்லுகின்றன என்றும் சொல்லுவார்கள். அந்த வேதங்களைப் படிக்க வேண்டியது அவசியமல்ல. பரதன் செய்கைகளைப் பார்த்தால் போதும். அவன் செய்கைக்கு முரண்பட்டன என்றால் அவை வேதமல்ல!

'எனைத்துள மறைஅவை
இயம்பல் பாலன,

பனைத்திரள் கரக்கரிப்
பரதன் செய்கையே

அனைத்திறம் ; அல்லன
அல்ல ; அன்னது

நினைந்திலை, என்வயின்
ஏய நெஞ்சினால்!'

[எனைத்துள மறை அவை இயம்பல் பாலன : என்ன வேத நூல்கள் உண்டோ அவைகள் சொல்லத்தக்கன இன்னது என்று நமக்குத் தெரியும் : பனைத்திரள் கரக்கரி பரதன் செய்கையே அனைத்திறம் : அப்படிச் சொல்லுபவற்றின் தன்மை யெல்லாம் பனை போன்ற துதிக்கையை யுடைய யானையை ஒத்த பரதனது செய்கைதான் ; அல்லன அல்ல : பரதன் செய்கைக்கு மாறாகச் சொன்னால் அது வேதம் அல்ல : என்வயின் ஏய நெஞ்சினால் : உன் இதயத்தை என்னோடு ஐக்கியப் படுத்திய அன்பினால்தான்.]

அப்பேர்ப்பட்ட உயர்ந்த செயலுடைய பரதனை இப்படி மாறாக நினைக்கலாமா?

'சேண்உயர் தருமத்தின்
தேவைச், செம்மையின்

ஆணியை, அன்னது
நினைக்க லாகுமோ

பூணியல் மொய்ம்பினாய்
போந்த(து) ஈண்(டு)எனைக்

காணிய, நீ இது
பின்னும் காண்டியால்.

[சேண்உயர் தருமத்தின் தேவை : மிக உயர்ந்த ஸத்யமான தர்மத்துக்கு அதி தேவதையான பரதனை ; செம்மையின் ஆணியை : உலகத்தில் நீதித்துவம் நடப்பதற்கு அச்சாணிபோல் ஆதாரமாக இருப்பவனை : பூண் இயல் மொய்ம்பினாய் : தோள் வளையம் அணிந்த வலிமை மிக்கவனே ; போந்தது ஈண்டு எனைக் காணிய : இங்கே வந்தது என்னைக் காண்பதற்காகத்தான் அப்பா.]

இரண்டொரு வார்த்தையால் தன்னுடைய பரிவைச் சொல்லி நிறுத்தினான் ராமன். லக்ஷ்மணன் பாடு கஷ்டமாகத்தான் போய்விட்டது.



# தியாகம்

பார்வதி



ஜயராமனுக்கு மிலிடெரி அகௌண்ட்ஸில் வேலை. அவனைத் திடீரென்று பங்களூரிலிருந்து டௌனுக்கு மாற்றியிருப்பதாகத் தந்திக் கட்டளை வந்தது. அடித்துப் புரட்டிக் கொண்டு, சாமான்களைச் சுருட்டிக் கொண்டு, உற்றார் உறவினரை மறந்து விட்டுப் புறப்பட்டான் ஜயராமன். பம்பாய்க்குப் போய் இரண்டு மணி நேரத்திற்குள் கப்பலைப் பிடிக்க 'பாலாட் பியர்' ஓடவேண்டும். ரயில் விக்டோரியா டர்மினஸுக்கு வந்து நின்றது. மாற்றல் கட்டளை எவ்வளவு எதிர்பாராததாக வந்ததோ, அவ்வளவு எதிர்பாராததாகவே ஜயராமனுக்குத் தன் சிநேகிதன் மெய்யுவின் ஞாபகமும் வந்தது.

"ஆம்; மெய்யு பம்பாயில்தான் இருக்கிறான். பார்த்து எவ்வளவோ வருஷங்கள் ஆயின. திடீரென்று அவனுக்கு விருந்தாளியாகப் போனால் என்ன?" என்று எண்ணி, மதுங்காவில் மெய்யு ஐயங்காரின் வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டினான்.

மதுங்காவில் ஒரு 'ரூம் டெனமெண்ட்' என்று சொல்லப்படும் பங்களா. அதில் ஒவ்வொரு அறையும் ஒரு குடும்பத்தைத் தன்னுள் அடக்கிக் கொள்ளும். சமையல், சாப்பாடு, படிப்பு, படுக்கை தவிர, விருந்தினர், குழந்தை குட்டிகள் எல்லாம் அந்த ஒரே அறையில்தான். திவசமும் திங்களும் கூட அந்த ஒரே அறையில்தான் என்று அறிந்த ஜயராமனுக்கு அதிசயமாக இருந்தது. மெய்யு ஸ்நானம் செய்துவிட்டு ஒரு பித்தளைத் தாம்பாளத்தில் அரிசியையும், நாலு வாழைக்காயையும் வைத்துக் கொண்டு, பிராமணன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். கதவை நாசூக்காகக் கைவிரல்களால் தட்டும் சத்தம் கேட்கவே, "ஏனய்யா இத்தனை போது? ஆபீஸ் லீவ் இல்லையா, உனக்கு?" என்று சொல்லிக் கொண்டே கதவைத் திறந்தான் மெய்யு.

"அடேடே! ராமுவா?...நீ...எங்கேடா வந்தே?" என்று அவன் தன் நண்பனைக் கண்டதும் முகம் முழுவதும் ஓர் ஆனந்தத்தைப் பரப்பி வரவேற்றான்.

"ஹல்லோ!" என்று ஜயராமன் மெய்யுவின் கையைக் குலுக்கத் தன் கையை நீட்டினான்.

"சிராத்தம்டா; எங்கம்மா வரா ..." என்று அவன் ஒதுங்கினான்.

ராமு ஏற இறங்க அவ்வறையைப் பார்த்தான். ஒரு இரும்புக் கட்டில், அதில் சுருட்டிய மெத்தைகள் இரண்டு, கீழே இரு பலகைகள், அதன் எதிரே தாம்பாளத்தில் சிராத்த சாமக்கிரியைகள். அறையின் மேற்கு மூலையில் கரண்டிகள், தட்டுகளுடன் ஒரு அகப்பைக் கூண்டும் தொங்கிற்று. அதனருகில் ஒரு சிறு திண்ணையும் அதன்மேல் இரண்டு 'ஸ்டௌ'வும் ஒரு குமுட்டி

பரிசுக் கதை 5

அடுப்பும். மேலே மூங்கில் கொடியில் வேஷ்டி, புடவை. கிழக்கு மூலையில் ஒரு மேஜை. பக்கத்தில் சாய்காலி. மேஜைக்கு மேல் சுவரில் புஸ்தக 'ஷெல்ப்'; அது தாங்க மாட்டாமல் வழியும் புத்தகங்களும் பத்திரிகைகளும். மேஜையின் கீழ் இரண்டு ஜதை பூட்ஸ். கதவின் அருகில் மூலையில் மூன்று டிரங்க் பெட்டிகள் ஒன்றின்மேல் ஒன்றாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. சுவரில் அலமாரிகள் மூடப்பட்டிருந்தன.

இந்த நிமிஷத்தில் ஜயராமனின் சமாசாரம் முழுவதும் மெய்யு தெரிந்துகொண்டு விட்டான். "பிராமணனுக்கு அப்புறகு தான் இந்த வீட்டில் காப்பி கிடைக்கும்! வா! அடுத்த வீட்டில் 'நீநீ' காப்பி தயாராகக் கொடுப்பாள். முதலில் அதைப் பார்த்து விட்டுப் பிறகு பேசுகிறேன்" என்று சொல்லித் தன் நண்பனை அடுத்த வீட்டிற்குக் கூட்டிப் போனான்.

அடுத்த அகம் என்றால் அடுத்த அறை, அவ்வளவுதான். புறாக்கள் கூண்டில் வசிப்பதுபோல்தானே பம்பாயில் சம்சாரம் நடத்துவது! ஜயராமன் அரை மனதாய், "வேண்டாம்; நம்மாத்திலேயே சாப்பிட்டால் போச்சு; கொஞ்சம் நாழி ஆனால் என்ன? தலை வெடித்து விடுமோ?" என்றான்.

மெய்யு அதற்குள் 'நீநீ' வீட்டில் நுழைந்தாய்விட்டது. "வாப்பா ராமு! 'நீநீ' என்றால் வித்தியாசமாக நினைக்காதே; நம் சகோதரிகூட அப்படி அந்நியோன்யமாயிருக்க மாட்டாள். சங்கோசமில்லாமல் வா" என்று சொல்லி, "நீநீ! ஒரு விருந்து! ஒரு கப் காப்பி!" என்றான்.

"சொந்தம் பண்ணுகிற சம்பிரமமோ? வஷ்மி கொடுக்க மாட்டேன் என்றானாக்கும்!" என்று திண்ணைப் பக்கம் ஏதோ சமையல் செய்த வண்ணம் பதில் வந்தது. "நீநீ" என்றால் குஜராத்தியோ மராட்டியோ என்று எதிர்பார்த்த ஜயராமன் தன் கண்களை ஆச்சரியத்தினால் மெய்யுவின் பக்கம் திருப்பினான். மெய்யுவும், "பிற்பாடு சொல்கிறேன்" என்று ஜாடை காட்டினான்.

அடுப்பங்கரையில் வேலையில் ஈடுபட்டிருந்த பெண்மணி கையில் ஒரு 'லோட்டா' காப்பியுடன் திரும்பினாள். அவளும் ஜயராமனைப் பார்த்ததும், திடுக்கிட்டு ஆச்சரியத்தினால் அப்படியே நின்றுவிட்டாள். ஜயராமனும் அவளைப் பார்த்துத் திகைத்துச் சமைந்து போனான். மெய்யு ஒன்றும் விளங்காதவனாய் நடுவில் விழித்தான். ஒரு கணம் இந்த பிரமிப்பு. அடுத்த நிமிஷம் "வாங்கோ! ராமுவா? ராமுதானே! வாங்கோ!" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பெண்மணி காப்பியைத் தட்டில் வைத்து ஜயராமனுக்கு எதிரே வைத்தாள்.

"மெய்யு! சீதாவைக் குழந்தைப் பருவத்திலிருந்து எனக்குத் தெரியும். அவள் அண்ணா நாச்சுவும் நானும் உயிர் ஒன்று, உடல் இரண்டு! பதின்மூன்று வருஷம் ஆச்சு! கொஞ்சமா? ஸ்திரீகளைப் பத்துப் பதின்மூன்று வருஷம் கழித்து அடையாளம் கண்டு கொள்வது சிரமம். நாம்தான் தடிக் கட்டைகள். சீதாவைப் பார், சீக்கிரம் என்னைத் தெரிந்து கொண்டு விட்டாள். இனி இங்கு காப்பி சாப்பிட எனக்குப் பாத்தியதை உண்டு. நீ போய் உங்கம்மாவைக் கடைத்தேற்று!" என்றான் ஜயராமன்.

பம்பாயில் இரண்டு மணி நேர அவகாசம் தான் கிடைக்கும் என்பது ராமு எதிர்பார்த்ததுதான். ஆனால் சீதாவைப் பார்க்கப் போகிறோம் என்று அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. பழைய நினைவுகளும் உணர்ச்சிகளும் அவனை இருபது வருஷங்களுக்கு முன்னால் தூக்கிக்கொண்டு போய்விட்டன.





## 2

நாச்சுவின் தகப்பனார் போலீஸ் இன்ஸ்பெக்டர். மகா கௌரவம் வாய்ந்தவர். சாதாரணமாய்ப் போலீஸில் சம்பளத்தைக் காட்டிலும் 'கிம்பளம்' அதிகம் என்று எல்லோரும் சொல்வது வழக்கம். ஆனால் விஸ்வநாதய்யர் வீட்டிற்கு ஒரு கட்டுக் கீரைகூட ஒருவரும் சும்மா கொண்டு வந்து தரக் கூடாது. நேர்மையையும் சத்தியத்தையும் அவ்வளவு பக்தியுடன் போற்றுபவர் அவர். நாச்சுவின் தங்கை சீதாவுக்குக் கலியாணம் நிச்சயமாயிற்று. நாச்சுவும் ராமுவும் சட்டை போட்டுக் கொள்ளாமல் திரிந்த நாள் முதல் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாத அவ்வளவு சிநேகிதர்கள். நாச்சுவின் தங்கைக்குக் கலியாணம் என்றால் ராமு வேற்று மனிதனா? அவனுக்கும் தங்கைதானே! நாச்சுவும் ராமுவும் அப்பொழுது ஆறாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்தார்கள்.

கலியாணம் வெகு விமரிசையாக நடக்க வேண்டும் என்று விஸ்வநாத அய்யர் அசாத்யமாக ஏற்பாடுகள் செய்திருந்தார். ஊராரும் சீதாவின் கலியாணத்தைச் சிறப்புறச் செய்வது தங்கள் பொறுப்பு என்று இருந்தார்கள். சம்பந்திகள் வந்து இறங்கியாகிவிட்டது. ராத்திரி போஜனமும் முடிந்தது. சிலர் மாத்திரம், "சம்பந்திகள் அசாத்யப் பேர்வழிகள்போல் இருக்கே!" என்று பேசிக்கொண்டார்கள். விடிந்ததும் ஏழு மணிக்கு முகூர்த்தம். மேளங்கள் முழங்கின. புஷ்பங்கள் கூடை கூடையாக மணத்தை வாரி வீசின. பந்தலில் மாத்திரம் ஒரு விதமான கலவரத்துடன் பரபரப்பு. "என்ன? என்ன?" என்று எல்லோரும் அங்கு மிங்கும் பாய்ந்தார்கள். "மாப்பிள்ளை வீட்டார் கோபித்துக் கொண்டிருக்கிறார்களாம். எதிர் ஜாமீன் போதாதாம். இன்னும் ஆயிரம் ரூபாய் வைத்தால்தான் தாலி கட்டுவார்களாம்!" என்ற பேச்சு தீ போல் பரவ ஆரம்பித்தது. நாச்சுவும் ராமுவும் கோபம் கொதிக்கக் கண்களால் தீப் பொறி கக்கினார்கள். "தாலி கட்டும் தறுவாயில் எதிர் ஜாமீன் போதாதென்கிறானே? அவன் என் பெண்ணை என்ன பாடு படுத்துவானோ? சோதகன்! மூட்டையைக் கட்டிக் கொண்டு போகச் சொல்லு" என்று விஸ்வநாதய்யர் கர்ஜித்து விட்டு, அடுத்த தெருவில் இருந்த தம் ஆப்தரான குப்பண்ணா வீட்டிற்குப் போய்விட்டார்.

குப்பண்ணாதான் ராமுவின் தாத்தா. அவமானமும் வருத்தமும் பொறுக்க மாட்டாமல் விஸ்வநாதய்யர் அங்கு போய் ஒரு அறையில் கண்ணை மூடிக்கொண்டு படுத்து விட்டார். ஆனால் பந்தலில் கலியாணம் நின்று போவது என்றால் ஊரார் விடுவார்களா? பொறுப்பெல்லாம் தங்களுக்கென்று ஆரோபித்துக் கொள்ளும் உறவினர்கள், சம்பந்தி வீட்டிற்கு நடையாக நடந்து, காலை ஏழு மணிக்குக் கட்டவேண்டிய தாலியை, மாலை ஏழு மணிக்குச் சீதாவின் கழுத்தில் முடித்து வைத்தார்கள். ஆனால் விஸ்வநாதய்யர் மட்டும் மணப் பந்தலை மிதிக்கவே இல்லை. "'என்னமோ நடந்தது நடக்கட்டும்' என்று காதில் போட்டுக்



கொள்ளாமல் இருந்தாரா? அல்லது, சீதாவின் சுகத்தைத் தம் மான பங்கத்தில் அடியோடு மறந்தாரா?" என்று ஒருவருக்கும் விளங்கவில்லை. ராமுவும் நாச்சுவும் பீமார் ஜனர்களைப் போல் குமுறிக் கொண்டு அங்குமிங்கும் திரிந்தார்கள்.

## 3

மறு வருஷம் நாச்சு, ராமு இவ்விருவரும் காலேஜில் படிக்கச் சென்னைக்குப் போய்விட்டார்கள். சீதா, வீட்டில் பொழுதே போகவில்லை என்று அடிக்கடி கடிதம் எழுதுவாள். இவர்களும் குறும்பாக 'வைத்தி'யம் படி என்று பதில் எழுதுவார்கள். மாப்பிள்ளையும் தீபாவளிக்கு வந்தவன் சில மாதங்கள் அங்கே தங்கினான். டிசம்பர் லீவுக்கு நாச்சுவும் ராமுவும் ஊருக்குப் போனார்கள். மார்கழி மாதம் உற்சவமும் பஜனையும் திருவாரூரில் வெகு பிரசித்தம். இவர்களைக் கண்டதும் சீதா, "அண்ணா! நீங்கள் வந்தாட்டா எனக்குக் கோவிலுக்குப் போகத் துணையாச்சு. பஜனையும் சுண்டலும் இல்லாமல் மார்கழி என்னமோ அழுது வழிகிறது!" என்று சொல்லி, அந்த ஹரிநாம பஜனைகள் கனீர் என்று விடியற் காலையின் நிச்சப்தத்தில் பாய்ந்து உள்ளத்தில் பாயும் அழகிய உற்சவத்தின் ஞாபகத்தை என்றும் மறக்க முடியாதபடி வர்ணித்தாள்.

மறுநாள் காலை நாலு மணிக்கே எழுந்து நாச்சுவும் ராமுவும் சீதாவுடன் கோவிலுக்குப் போனார்கள். 'செவி நுகர் கனிகளால்' இவர்கள் பசி தீர்த்து வீடு திரும்பும்போது நாச்சு, "அடே! ராமு! சீதாவை ஆத்துக்குக் கூட்டிண்டு போ. நான் ஒரு நிமிஷம் கோடி ஆத்துப் பையாவுடன் ஒரு சங்கதி பேசிவிட்டு வருகிறேன்" என்று சொல்லிக் கூட்டத்தில் மறைந்தான்.

• ராமு, சீதாவுக்குத் துணையாக வீடு வந்தான். வாசற்படியில் காலை வைத்ததும் சீதா திடுக்கிட்டாள். சட்டென்று புடவையை இழுத்துப் போர்த்துக்கொண்டு விடுவிடு என்று உள்ளே போய் விட்டாள். இந்த பயத்திற்கு யார் காரணம் என்று நிமிர்ந்து பார்த்தான் ராமு. மெத்தையில் மாப்பிள்ளை நின்று கொண்டிருந்தார். சீதாவுக்கு வெட்கம் வந்து விட்டதாக்கும் என்று நினைத்து ராமு வீடு சென்றான்.

அன்று விஸ்வநாதய்யர் வீட்டிற்கு வரும்பொழுது பிற்பகல் மணி இரண்டு. உள் நுழைந்ததும் ஒரே விம்மலும் அழுகையும் அவரை எதிர்கொண்டது. "யார், யாரை அடிக்கிறார்கள்?" என்று ஒன்றும் புரியாமல் மாடிக்கு ஓடிப்போய்ப் பார்த்தார். சீதாவின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிக் கொண்டிருந்தது. கதவின் மூலையில் தலைவிரிந்து கால் வரை நடுங்கிக் கொண்டு நின்றிருக்கும் பெண்ணைப் பார்த்தார். "நான் இருக்கும்பொழுது என் பெண் தேம்பி அழக் காரணமென்ன?" என்று துடித்துக் கொண்டு, அறையின் மத்தியில் மிடுக்காகவும் மீசையை முறுக்கிக் கொண்டும் நின்று கொண்டிருந்த மாப்பிள்ளையைப் பார்த்துக் கேட்டார். "என் விஷயத்தில் யார் பிரவேசிக்க முடியும்? என் மனைவிக்கு நான்தான் 'லீகல் கார்டியன்.' கண்டவனுடன் வருவதாம்! கோவிலாம்! கூத்தாம்! நன்றாயிருக்கிறது பெண்ணை வளர்க்கும் லக்ஷணம்!" என்று கூண்டில் புலி பாய்வதுபோல்

இங்கு மங்கும் நடந்து கொண்டே இரைந்தான்.

"யாரடா நீ ப்ரூட்! நான் செத்தால் அல்லவா என் குழந்தை அழ வேண்டும்? கண்டவன் யாரடா கண்டவன்? தமையன் போல் குழந்தை முதல் விளையாடின ராமுவையா இப்படிச் சொல்கிறாய்? சீ!" என்றார் விஸ்வநாதய்யர்.

"தகப்பனும் தகப்பன்!" என்று முணுமுணுத்தான் மாப்பிள்ளை. வார்த்தை தடித்தது. சீதா வந்து அப்பாவின் கைகளைப் பிடித்துக்கொண்டு, காலில் விழுந்து கெஞ்சினாள். "மன்னித்து விடுங்கள், அப்பா! என் தலை விதிபோல் நடக்கட்டும். நீங்கள் ஏன் மன வருத்தப்பட்டுக் கொள்கிறீர்கள்?" என்று அழுது மன்றாடினாள். விஸ்வநாதய்யர் அன்றே 'காம்பு'க்குப் போய் விட்டார். அவர் மனம் பெரியதொரு ஏமாற்றத்தையும் வெறுப்பையும் அடைந்து விட்டது.

வைத்தியநாதன் காரணம் இல்லாமலும், அதி குரூரமாகவும் மனம் புண்ணாகும்படி சீதாவைத் தீண்டி, அடித்தும், திட்டியும் துன்பம் உண்டாக்கி வருகிறான் என்பதை அறிந்ததும் அவர் மனம் உடைந்ததில் ஆச்சரியம் என்ன?

தாச்சு அன்று இரவே ராமுவிடம் வந்து, தான் அன்றே சென்னைக்குப் போவதாகச் சொன்னான். லீவ் இன்னும் இருக்கும் பொழுது ஏன் இவ்வளவு அவசரம் என்று ராமுவுக்கு விளங்கா விட்டாலும், விஷயம் பின்னால் தானே தெரிகிறது என்று எண்ணித் தாச்சுவுடனேயே ராமுவும் சென்னைக்குப் பிரயாணமானான். ரயிலில், அன்று சீதா பட்ட ஹிம்சையையும், அதன் காரணத்தையும் சொல்லி, தாச்சு கண்ணீர் விட்டான். புருஷன் மனைவியினிடையே ஏற்பட்ட சண்டைக்குத் தான்தான் காரணம் என்று அறிந்ததும், ராமுவின் மனம் படாத பாடு பட்டது. "சீதாவின் கண்களிலிருந்து கண்ணீர் சிந்தும்படி செய்தது, அக்குடும்பத்தின் லக்ஷ்மியையே ஒழித்து விடுமோ?" என்று எண்ணி நடுங்கினான் ராமு.

4

காலச்சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டு சுழலும் மனிதன் தன் வாழ்க்கையையே தான் அறியாமல் மாறுதலுக்கு உட்



படுத்திக் கொள்கிறான். ஜயராமனுக்கு மிலிடெரி அகௌண்ட்ஸில் ஒரு குமாஸ்தா வேலை கிடைத்து விட்டது. அவன் பெஷாவருக்குப் போய்விட்டான். 'கண் முன் இருக்கும்வரைதான் ஞாபகத்திலும்' என்பது உலக ரீதி. நாட்கள் மாதங்கள் ஆகவும், மாதங்கள் வருஷங்களாகவும் வளரவே, ஞாபகமும் மங்கி மங்கி, கடைசியில் ராமுவுக்குத் தாச்சுவின் குடும்ப விஷயங்கள் ஒன்றுமே தெரியாமல் போய் விட்டன.

மூன்று வருடங்கள் சென்று அவன் சென்னைக்கு வந்தான். தாச்சுவைத் தேடிக் கொண்டு அலைந்தான். தாம்பரத்தில் கிறிஸ்துவக் கலாசாலையில் அவன் வேலையில் அமர்ந்திருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கு போய் இறங்கினான். இரு நண்பர்களும் மௌனமாகச் சந்தோஷத்தில் ஆழ்ந்திருந்தார்கள். பிறகு ராமு விஸ்வநாதய்யரையும் சீதாவையும் பற்றி அன்புடன் விசாரித்தான். தாச்சுவுக்கு ராமுவைச் சந்தித்ததால் உண்டான ஆனந்தம் பறந்து போய் விட்டது. துக்க நினைவுகளால் அவன் கண்களில் நீர் நிரம்பியது. "அப்பா இக்கஷ்டங்களிலிருந்து விடுபட்டார்" என்று சொல்லி மேஜை அறையைத் திறந்து, அதிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து ராமுவிடம் கொடுத்துவிட்டு, தன் முகத்தை மூடிக் கொண்டு துக்கத்தில் மூழ்கினான் தாச்சு.

ராமுவின் கைகள் நடுங்கின. அந்தக் கடிதத்தைப் பிரித்தான்; படிக்கலானான்:—

திருவனந்தபுரம்,
மார்கழி, 23உ.

அன்புள்ள அண்ணாவுக்கு அநேக நமஸ்காரம்.

க்ஷேமம். நீ உன் புதிய உத்தியோகத்தில் சந்தோஷமாகவும் நிறைவுடனும் நடந்து கொள்வாய் என்று நம்புகிறேன். உனக்கு மேன் மேலும் நல்ல பேரும், புகழும், செல்வமும் பொங்கி வருமாறு ஈஸ்வரன் அருளை வேண்டுகிறேன்.

என்னைப் பற்றி நீ கொஞ்சமும் வருத்தப் படாதே. யார் யார் எப்படி எப்படி இருக்க வேண்டும் என்று ஏற்பட்டிருக்கிறதோ, அப்படித்தான் நடக்கும். அதை மாற்ற நம் பலஹீனமான மனித யத்தனத்தால் முயன்றால்,

அதைவிடப் பைத்தியக்காரத்தனம் வேறில்லை. கப்புக்கு ஒரு தம்பி பிறந்திருக்கிறான். அவன் தத்ரூபம் உன்னைப்போலவே இருக்கிறான். கப்புவும் தம்பியை மிகப் பெருமையாக எடுத்துச் சீராட்டுகிறான்.

இவர் மாதத்தில் பாதி நாட்கள் ராத்திரி ஒரு மணிக்கோ, இரண்டு மணிக்கோ தான் வீட்டுக்கு வருகிறார். அப்பொழுது சாப்பாடு சூடாக இல்லாவிட்டால் ருத்ராகாரம் வந்து விடுகிறது. ஊரில் எல்லோரும் என்னவெல்லாமோ சொல்லுகிறார்கள். நானே ஒரு நாள் 'புட்டி'யைப் பையில் பார்த்து விட்டேன். 'குழந்தைகள் ஒன்றுக்கு இரண்டு ஆயிடுத்தே! இனியாவது இந்தக் கெட்ட பழக்கத்தை விட்டுவிடக் கூடாதா?' என்று மிகவும் தணிந்துதான் சொன்னேன். கையில் இருந்த செம்பை ஜலத்துடன் என் மண்டையில் விட்டு எறிந்தார். ஊர் சிரிக்கப் போகிறதே என்று நான் பொறுத்துக் கொண்டு இருந்தும், குழந்தை கப்பு 'வீர் வீர்' என்று அலறி விட்டான். அக்கம் பக்கத்தார் ஓடி வந்து அவர் இருந்த கோலத்தையும் அமர்க்களத்தையும் கண்டு சமாதானப்படுத்திப் படுக்க வைத்தார்கள்.

ஊரில் கடன் வாங்க இனி ஒருவர் பாக்கி கிடையாது. பால்காரி கடன் கொடுக்க மாட்டேன் என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள். அடுத்தாத்து மாமி என்பேரில் இருக்கும் இரக்கத்தால் குழந்தைக்கு மாத்திரம் தினம் ஆழாக்குப் பால் தருகிறாள்.

போன வாரம் யாரோ ஒரு ஸ்திரீயை வீட்டுக்கு அழைத்து வந்து, "காப்பி இரண்டு கப்!" என்றார். பாலும் சர்க்கரையும் இல்லையே என்று தயங்கினேன். "தரித்திரம்! நீ இருக்கும் இடத்தில் தொலைத்துத் தான் போகும்!" என்று சொல்லி, காலால்...... அண்ணா! என் கஷ்டம் தீராத கஷ்டம். உன்னை அதைக் கொண்டு வாட்டுவது அநியாயம்.

கப்பு 'வெடுக்' 'வெடுக்' என்று பேசுகிறான். நீ அவனுக்கு அனுப்பிய புதுச் சொக்காயைக் கழட்டாமல் போட்டுக் கொண்டு இருக்கிறான். பொம்மையைக் கட்டிக் கட்டி முத்த மிடுவது ஓயவே யில்லை.

உனக்கு என் பேரில் இருக்கும் அன்பினால் வேறொன்றையும் கவனியாமல் இங்கு வந்து என்னையும் குழந்தைகளையும் விடுவித்துக் கொண்டு போவாய். அது உன் கடிதத்திலிருந்து அழுத்தமாகத் தெரிகிறது. ஆனால், நாச்சு அண்ணா! எனக்காகக் கேட்டுக் கொள்கிறேன்: நீ இங்கு வந்தாயானால் உயிருடன் திரும்புவது கஷ்டம். வராதே!

இவர் மனம் ஒரு பாலைவனம். ஒரே வரண்ட மணற்காடு. கொஞ்சமும் திரவம் கிடையாது. நீ என்னை விடுவித்தால் எவ்வளவு நாட்கள்தான் நான் உனக்குப் பாரமாக இருக்க முடியும்?

தம்பியை 'சின்னநாச்சு' என்று கூப்பிடுகிறேன். சிரிக்கும் பொழுது அப்பா வாட்டமா இருக்கு.

இப்படிக்கு,
உன் பிரியமுள்ள
சீதா.

பி. கு.

வீட்டு வாடகை எட்டு மாதமாகப் பாக்கி; என்ன நடக்குமோ!

கடிதத்தைப் படித்து முடித்ததும், ராமுவின் கண்களை நீர் மறைத்தது. துயரம் நெஞ்சை அடைத்தது. பேசாமல் நாச்சுவைப் பார்த்தான். 'சீதா' என்று பெயர் வைக்கும்பொழுதே அவளைச் 'சோகத் தானாக' ஆக்கிவிட்டார்கள். "என்ன பொறுமை! என்ன வைராக்கியம்!" என்று ராமு மனதில் எண்ணினான்.

"நாச்சு! இந்தக் கடிதம் வந்து ஒரு வருஷம் ஆகிறதே! பிறகு தகவல் இல்லையா?" என்று கேட்டான் ராமு.



நாச்சு கனவில் விழித்தவன்போல் விழித்தான். "அவளுக்காகப் பார்க்கிறேன். இல்லாவிட்டால் ஒரே இரவில் அந்த ராக்ஷஸனைக் கொன்று விட்டு நான் போய் என்னைப் போலீஸாருக்குச் சமர்ப்பித்துக் கொள்வேன். ஆனால் சீதா தாங்க மாட்டாளே! பூவினும் மெல்லியது அவள் ஹிருதயம். வைரத்தினும் திடமானது அவள் வைராக்கியம். ராமு! உன்னிடம் சொல்லாவிட்டால் வேறு யார் இருக்கிறார்கள் எனக்கு? போனமாதம் திருவனந்த












புரத்திலிருந்து சீதாவின் பக்கத்து வீட்டுக்காரர் வந்திருந்தார். ஹா! அவர் சிந்திய கண்ணீர்! 'உன் தங்கை ஒரு தெய்வம். அந்தப் பொறுமையும், சாந்தமும் சாதாரண மனுஷ்யாளுக்குக் கிடையாது. வீட்டுக்கு வாடகை கை பாக்கி. மார்வாடியிடம் இரண்டாயிரம் ரூபாய் கடன். ஜப்தி செய்யும் வாரண்ட் வந்து விட்டது. ஆசாமி வீட்டில் இல்லை. பாவம்! சீதா, இரண்டு குழந்தைகளை வைத்துக்கொண்டு 'பொலபொல' வென்று கண்ணீர் உதிர்த்தாள். அன்றைபோல் அன்றிரவு தெருத்திண்ணையில் குழந்தைகளைப் போட்டுக்கொண்டு அழுது கொண்டிருந்தாள். வீட்டில் இருக்கும் பாத்திரம், பண்டம், எல்லாம் மார்வாடி எடுத்துக் கொண்டு போய்விட்டான். நாங்கள் அக்கம் பக்கத்தார் அவளை அழைத்து, நிற்க நிழலும், பசிக்குச் சாதமும் போட்டுப் பத்து நாள் வைத்திருந்தோம்' என்று சொல்லி அவர் வாய்விட்டு அழுதுவிட்டார். ராமு! நான் என்னடா செய்வது? என்னைத் தான் 'நீ வரக்கூடாது' என்று சத்தியம் செய்யச் சொல்லி வாக்கு வாங்கிண்டு இருக்காளே!" என்றான் நாச்சு.

ராமு நாச்சுவுக்குப் பல விதமாகத் தேறுதல் சொல்லி, சில தினங்கள் அவனுடன் தங்கி, பிறகு, பிஷாவர் போய்ச் சேர்ந்தான்.

ஒரு வழியாக அந்த மிருகத்தினிடமிருந்து தப்பி, சீதா தன்னிடம் வந்து இருப்பதாக, நாச்சு பிறகு ஒரு கடிதத்தில் ராமுவுக்குத் தெரிவித்தான்.

## 5

இன்று பன்னிரண்டு வருஷங்களுக்கப்பால் பம்பாயில் மதுங்காவில் 'நீநீ' என்ற சீதாவைச் சந்திக்க நேர்ந்தால் அந்த ஆச்சரியத்தை எப்படிச் சொல்வது? ராமுவுக்குத் தன்னுள் புதை பாணம் போல் எழுந்து வரும் கேள்விகளில் எதையும் கேட்க நா எழவில்லை. "நீ பம்பாய் வரக் காரணமென்ன?", "குழந்தைகள் சௌக்கியமா?", "இங்கே யார் இருக்கிறார்கள்?" என்று சரமாரியாகக் கேள்விகள் எழுந்தன. ஆனால் ராமு அவைகளை அடக்கிக் கொண்டு, "சீதா! நாச்சு எங்கே? எத்தனை வருஷங்களாயின!" என்று மாத்திரம் கேட்டான். சீதா ஹிருதயத்திலிருந்து பொங்கி வரும் துக்கத்தை அடக்க முயன்றாள். "அண்ணா சத்தியாக்கிரகியாக ஒரு வருஷம் ஜெயிலுக்குப் போயிருக்கிறான்" என்று மாத்திரம் சொன்னாள்.

சீதாவின் நடை உடை பாவனைகளிலிருந்தும், அவள் முகம் கொண்டிருந்த ஒரு திருப்திகரமான சாயலிலிருந்தும், இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் அவள் கஷ்டங்களெல்லாம் விடிந்து அவசியம் விமோசனம் ஏற்பட்டிருக்கும் என்றும் ராமு ஊகித்தான். ஆகையால் சீதாவுடன் சந்தோஷமாகப் பால்ய விளையாட்டுகளையும் நாச்சுவின் அன்

யையும் குணத்தையும் பற்றிப் பேசி விட்டுப் புறப்பட்டு விட்டான்.

சீதாவைப் பற்றிப் பூரா விவரம் தெரிந்து கொள்ள ராமுவின் மனம் துடியாய்த் துடித்தாலும் அவனை இரு நிஜமான பயம் ஊமையாக்கி விட்டது. ஒன்று, அன்று மார்கழி மாதப் பனியிலிருந்து தான் அழைத்துப் போனதும், தானே சீதாவின் வாழ்க்கையில் முதல் துயரம் உண்டு பண்ணியதும். இரண்டாவது, ஏடன் கப்பல் அவனுடைய உணர்ச்சிகளுக்காகவும், பால்ய சகவாச தோஷத்திற்காகவும் ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்காது என்பது. ஆகையால், சீதாவை இரண்டுதரம் ஒரே கேள்வியைக் கேட்டான். “நீ சந்தோஷமாக இருக்கிறாயா?”, “நீ சௌக்கியமாக இருக்கிறாயா?” என்று கேட்டான். அதற்கு அவள், “நான் குழந்தைகளுடன் சௌக்கியமாகவே இருக்கிறேன்” என்று சொன்னாள். அவளிடம் விடை பெற்றுக் கொண்டு கப்பலுக்குப் புறப்பட்டான். டிராம் வண்டியின் மாடியில் உட்கார்ந்து கொண்டு போகும் பொழுது சீதாவின் நினைவுதான். மெய்யுவிடம் இருந்து சில விஷயங்களை அறிந்து கொண்டான்.

“சீதா பம்பாயில் மதுங்காவில் தமிழர் பள்ளிக்கூடத்தில் தமிழும் தையலும் கற்றுக் கொடுக்கிறாள். அவள் அங்கு வந்து மூன்று வருடங்களாயின. அவள் புருஷன் சுத்த உதவாக் கரையாம். ரொம்ப ஹிம்சைப் பட்டவள்போலிருக்கிறது. மிகப் புத்திசாலி. அன்பு ததும்பும் சுபாவம். சத்ருக்களைக்கூட மன்னிக்கும் பெருந்தன்மை!” என்ற சீதாவின் புகழ் காதில் ஒலித்தது. கப்பலுக்கு வந்து சேர்ந்தான்.

கப்பல் பம்பாய்த் துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டது. ராமு சிந்தனையில் ஆழ்ந்தான். சீதா! உன்னைப்போல் போற்றத்தகும் பெண்களால் அல்லவா நம் தேசத்திற்குப் பெருமை! தியாகம், சாந்தம், அன்பு, அனுசரணை, அடக்கம், அமரிக்கை, பொறுமை, இவை அல்லவா உன் பூஷணங்கள்! இந்திய மாதருக்கு எந்த மாதரும் இணையாவரோ?

## 6

ஒரு வருஷத்திற்குப் பிறகு ராமு ஏடனிலிருந்து இந்தியா திரும்பினான். மதுங்காவில் மறுபடியும் மெய்யுவையும், சீதாவையும் தேடிக்கொண்டு போனான். மெய்யு மாத்திரம் அதே வீட்டில் இருந்தான். ஆனால் சீதா வீடு மாற்றிவிட்டதாகத் தெரிய வந்தது. “ராமு! கேட்டாயா! என்ன அநியாயம்! சீதாவின் புருஷன் இங்கு வந்து சேர்ந்து விட்டான். இவள் ஏதோ அரை வயிற்றுக் கஞ்சி சம்பாதிக்கிறாள் என்றால் அதற்குப் பங்குக்கு வெட்கமில்லாமல் வந்து உட்கார்ந்து விட்டான், ஆண் பிள்ளை!” என்றான் மெய்யு.

ராமுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. “மறுபடியுமா? அவனிடம் இருபது வருஷ காலம் அடியும், மிதியும், ஹிம்ஸையும் அவமானமும் அனுபவித்த சீதாவுக்கு இன்னமும் விடுதலை இல்லையா? அவள் என்ன செய்தாள்? குழந்தைகளையும் தன்னையும் அனாதையாக நிறுத்திய பாதகனை புறக்கணிக்கவில்லையா?” என்று படபடப்புடன் கேட்டான் ராமு.

“இல்லை! முகமலர்ச்சியுடன் அவனுக்குச் சிசுருஷை செய்கிறாள். அதுதானே நம் இந்தியப் பெண்களின் அழியாத புகழ்!” என்றான் மெய்யு.

ராமுவின் எண்ணங்கள் ஓர் உன்னத உணர்ச்சியில் மோதின: பாதகங்கள் செய்வது மனித இயல்பு; ஆனால் பாதகங்களை மன்னிப்பது தெய்விகமல்லவா?



# வெள்ளரித் தோட்டம்

மாலு

நரி வெள்ளரித் தோட்டம் போட்டுப் போன வருஷம் நிறையப் பணம் சேர்த்ததைப் பார்த்த முயல் இந்த வருஷம் தானும் வெள்ளரித் தோட்டம் போடவேண்டும் என்று தீர்மானித்து விட்டது.

நிலத்துக்குச் சொந்தக்காரரான கரடியாரிடம் சென்று தனக்கு இந்த வருஷத்துக்கு நிலம் குத்தகைக்கு வேண்டும் என்றும், தானும் வெள்ளரித் தோட்டம் போடப் போவதாகவும் சொல்லிற்று. கரடியும் சரி என்று ஒப்புக் கொண்டது.

ஆனால், அந்த நிலத்திற்குத் தண்ணீர் வசதியே இல்லை. சுமார் ஒரு பர்லாங்கு தூரத்திலிருந்து தண்ணீர் கொண்டு வரவேண்டும். முயல் யோசித்து, இரண்டு மரத் தொட்டிகள் தயார் செய்துகொண்டது. காலையில் எழுந்திருந்தது முதல், தண்ணீர் கொண்டு வந்து தோட்டத்துக்குக் கொட்டுவது தான் வேலை. அந்த வேலையை அதனால் தொடர்ந்து செய்ய முடியவில்லை. வெள்ளரித்தோட்டம் போட்டுப் பணம் சம்பாதிப்பது என்பது சாமானியமான காரியமில்லை என்பதைத் தெரிந்து கொண்ட முயல் மிகவும் வருத்தத்துடன் தோட்டத்தின் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டிருந்த சமயத்தில், பக்கத்தில் ஒரே புகைச்சலும் பயங்கரச் சத்தமும் கேட்டது.



அந்தச் சத்தம் வந்த திக்கை நோக்கி வேகமாக ஓடியது முயல். அங்கே ஒரு மந்திரவாதி ஒரு ஜாடியிலிருந்து புகையை வரவழைத்துக் கொண்டிருந்தான். ஒரு மந்திரக் குல்லாயும், மந்திரத் தடியும் வைத்திருந்தான். மந்திரக் குல்லாயைத் தலையில் வைத்துக்கொண்டு மந்திரத் தடியைப் பார்த்து எதைச் சொன்னாலும் அந்தத் தடி அவன் சொன்னதுபோலவே கேட்டது. அதைப் பார்த்துக் கொண்டே இருந்த முயலுக்கு அதை எப்படியாவது எடுத்துக் கொண்டு வந்து விடவேண்டும் என்று தோன்றி விட்டது.

மந்திரவாதி மந்திரக் குல்லாயையும் மந்திரத் தடியையும் ஒரு மூலையில் வைத்து விட்டு எங்கேயோ போனான். இதுதான் சமயம் என்று முயல் அவசரம் அவசரமாக மந்திரக் குல்லாயைத் தன் தலையில் வைத்துக் கொண்டு மந்திரத் தடியைப் பார்த்து,



"இந்த இரண்டு வாளியையும் எடு" என்று சொல்லிற்று. என்ன ஆச்சரியம்! திடீரென்று அந்த மந்திரத் தடியில் இரண்டு கைகள் தோன்றி இரண்டு வாளியையும் எடுத்துக் கொண்டன. "என் பின்னால் வா" என்று சொல்லிக்கொண்டு முயல் மிகவும் கர்வத்துடன் முன்னே போய்க் கொண்டிருந்தது.

கிணற்றின் அருகில் வந்ததும், "இந்தக் கிணற்றில் இருக்கும் தண்ணீரை எடுத்துச் சென்று அந்தத் தோட்டத்தில் கொண்டுபோய் ஊற்ற வேண்டும்" என்று முயல் உத்தர விட்டது. மந்திரத் தடியும் தண்ணீரைக் கொண்டுபோய்த் தோட்டத்தில் கொட்ட ஆரம்பித்து விட்டது. ஒரு மணி நேரத்துக்குள் தண்ணீர் தோட்டத்தில் மூலை முடுக்கெல்லாம் பாய்ந்து விட்டது.

முயலுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. "தண்ணீர் ஊற்றியது போதும்" என்று சொல்லிற்று. என்ன ஏமாற்றம்! அந்த மந்திரத் தடி தண்ணீர் ஊற்றுவதை நிறுத்தவே இல்லை. முயலுக்குக் கோபம் தாங்கவில்லை. பக்கத்திலிருந்த கோடரியை எடுத்துத் துண்டு துண்டாக அந்த மந்திரத்தடியை வெட்டிப் போட்டு விட்டது. முயலால் நம்பவே முடியவில்லை. அதற்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. மந்திரத் தடியின் ஒவ்வொரு துண்டும் இரண்டு மரத்தொட்டிகளை எடுத்துக் கொண்டு தண்ணீரைக் கொண்டுபோய்த் தோட்டத்தில் கொட்ட ஆரம்பித்துவிட்டன. தண்ணீர் வெள்ளமாக பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்து விட்டது. முயல் ஒரு கூடைத் தெப்பத்தில் உட்கார்ந்து கொண்டது. தண்ணீர் அதிகம் ஆக ஆக முயலுக்குப் பயம் அதிகமாகி விட்டது.

இந்தச் சமயத்தில் வெளியில் போயிருந்த மந்திரவாதி திரும்பி வந்து கையைத் தலைக்குமேல் தூக்கி ஏதோ சொன்னார். உடனே தண்ணீர் கொட்டுவதை மந்திரத் தடிகள் நிறுத்தியதுடன் எல்லாத் தடிகளும் சேர்ந்து ஒரே தடியாகவும் மாறி விட்டது. தண்ணீரும் வற்றி விட்டது.

அதைப் பார்த்த முயலுக்குத் தன்னுடைய அறியாமை தெரிந்தது. தான் தலையில் வைத்திருந்த மந்திரக் குல்லாயை அந்த மந்திரவாதியின் காலடியில் பணிவுடன் விட்டு நமஸ்காரம் செய்து விட்டு, "தயவு செய்து என் குற்றத்தை மன்னிக்க வேண்டும்" என்றது.

மந்திரவாதி முயலைப் பார்த்துச் சிரித்துவிட்டு, "நீ குற்றம் செய்யவில்லை. நீ செய்த காரியமெல்லாம் சரிதான். ஆனால் நீ எந்தக் காரியத்தைச் செய்ய ஆரம்பித்தாலும் அதைக் கடைசி வரையில் தெரிந்து கொண்ட பிறகே செய்ய வேண்டும். அரைகுறையாய்த் தெரிந்து கொண்டு எதிலும் தலையிடாதே. அப்படிச் செய்தால் எடுத்த காரியம் இம்மாதிரி தான் முடியும்" என்று புத்தி சொல்லி விட்டுப் போய்விட்டான்.



# பல சரக்கு

1934-ம் வருஷம் இந்தியா சட்ட சபைத் தேர்தலுக்கு ஸ்ரீ சத்தியமூர்த்தி நின்றார். தேர்தல் பிரசாரத்தை ஆரம்பித்து வைக்க ஸரோஜினி தேவி சென்னைக்கு வந்திருந்தார். இது, அவரை எதிர்த்து நின்ற அபேட்சகர் திவான் பகதூர் ராமஸ்வாமி முதலியாருக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஸரோஜினி தேவியின் விஜயத்தை வைத்துக் கொண்டே சத்திய மூர்த்தியை மட்டந் தட்ட நினைத்து, அவர், "பூ! கேவலம், மகா கேவலம்! சத்திய மூர்த்திக்குச் சப்பைக் கட்டுக் கட்டுவதற்காகவே ஆயிரம் மைலுக்கு அப்பாலிருந்து ஸரோஜினி தேவி வந்திருக்கிறார். இதிலிருந்தே சத்தியமூர்த்தி கட்சி எவ்வளவு பலஹீனமாயிருக்கிறது என்று தெரியவில்லையா?" என்று கேட்டார். அதற்கு, "ஆயிரம் மைலிலிருந்து வந்த ஸரோஜினி தேவி எனக்குச் சப்பைக்கட்டு கட்டுவது மேலா? அல்லது ஆறாயிரம் மைலுக்கு அப்பாலுள்ள வெள்ளைக்காரர்களுக்கு இங்கேயிருந்து கொண்டு ராமஸ்வாமி முதலியார் ஓயாமல் சப்பைக் கட்டு கட்டுகிறாரே, அது மேலா?" என்று சத்திய மூர்த்தி போட்டார் ஒரு போடு!





அமெரிக்காவின் அந்நியநாட்டு மந்திரி ஸம்னர்வெல்ஸ் ஒரு தடவை காட்டு இலாகா அபிவிருத்தி மகாநாட்டுக்கு ஒரு பிரசங்கம் செய்வதற்காக அழைக்கப்பட்டிருந்தார். அவரும் அவ்வாறே அக்கூட்டத்திற்குச் சென்று ஏற்கனவே தாம் தயாரித்து வைத்திருந்த பிரசங்கத்தைப் படித்தார். ஒவ்வொரு வாக்கியத்தையும் கேட்டுவிட்டு எல்லோரும் கரகோஷ ஆரவாரம் செய்தார்கள்.

ஸம்னர் வெல்ஸுக்கு ஒன்றுமே புரியவில்லை. தம் பிரசங்கத்தில் எல்லோரும் நகைக்கும்படி அப்படி ஹாஸ்யமாக என்ன இருக்கிறது என்பது தெரியவில்லை. பிரசங்கத்தை முடித்துவிட்டுவீட்டுக்கு வந்து மகாநாட்டு நடவடிக்கைகளை வாசித்துப் பார்த்ததும் விஷயம் விளங்கிற்று. இவருக்கு முன் பேசியவர் இவர் பிரசங்கத்தின் நகலை எடுத்து வைத்துக் கொண்டு வார்த்தைக்கு 'வார்த்தை அப்படியே படித்திருந்தார் என்று தெரிந்தது!





இரண்டாம் போர்முனையில் படுகாயமடைந்த ஒரு சிப்பாயைப் பார்த்து, டாக்டர் "அப்பா! நீ பிழைக்க மாட்டாய். நீ சொல்ல வேண்டிய சமாசாரம் ஏதாவது இருக்கிறதா?" என்றாராம்.



"என் சட்டைப்பையில் இருக்கிறது" என்றானாம் அந்த சிப்பாய்.

டாக்டர் அவன் சட்டைப் பையிலிருந்து ஒரு புஸ்தகத்தை எடுத்தார்.

"இதைத்தானே சொன்னாய்?" என்று கேட்டார் டாக்டர்.

"ஆமாம்; அதைத் திறவுங்கள்!" என்றான் சிப்பாய்.

"இதற்குள் ஒரு பத்து டாலர் நோட் இருக்கிறது. இதை என்ன செய்ய வேண்டும்?" என்றார் டாக்டர்.

சிப்பாய் மெதுவாக, "நான் சாகமாட்டேன் என்பதற்கு அந்தப் பணத்தைப் பந்தயம் கட்டுகிறேன்" என்றானாம். அப்படியே பிழைத்தும் எழுந்தான்!



பிலிப்பைனிலுள்ள மணிலா நகரத்துக்கு வந்து கொண்டிருந்த ஜலத்தைச் சுத்தப்படுத்த வேண்டுமென்று சுகாதார அதிகாரிகள் கருதினர். உடனே ஒருவித மருந்தை ஜலத்தில் உபயோகிக்கப் போவதாகவும் அறிவிக்கப்பட்டது. அவ்வளவுதான்! உடனே, நகர ஜனங்கள் ஜலம் கெட்டுப் போய் விட்டதாகப் புகார் செய்ய ஆரம்பித்து விட்டனர். ஒரு வாரம் கழித்து மாற்று மருந்து போட்டு விட்டதாக அவர்கள் நினைத்துக் கொண்டு, ஜலம் சுத்தமாகி விட்டதாக அவர்களாகவே சொன்னார்கள். ஆனால் இதில் வேடிக்கை என்னவென்றால், சுகாதார அதிகாரிகளுக்கு அதுவரை எந்த மருந்துமே கிடைக்காதபடியால் ஜலத்தில் ஒன்றுமே கலக்கவில்லையாம்!




IT WORKS LIKE A MAGIC WAND ON THE SKIN IF USED REGULARLY AFTER BATH AND BEFORE GOING OUT FOR A WALK. MAKES THE SKIN SOFT AND DELICATE, & IS SWEETY FRAGRANT. IT IS VERY POPULAR AMONGST MODERN LADIES & THEIR CHILDREN TRY ONCE AND BE CONVINCED OF IT'S MAGIC EFFECTS.

AVAILABLE AT EVERY BIG STORE OR CHEMIST.

Mfd by:

**THE NATIONAL TRADING CO.**
MANGALDAS Rd. BOMBAY, 2. TELE 33848

மதராஸ் ஏஜண்டுகள் :

B. C. ராமலிங்கம் & ஸன்.,
21/422, தங்கசாலைத் தெரு, மதராஸ்

# ஹோமியோபதி

வைத்தியத்தை ஆங்கிலத்திலோ, தமிழிலோ தாங்கள் வீட்டிலிருந்தே படித்து டாக்டர் ஆகலாம். முழு விபரங்கள் அடங்கிய தமிழ் அல்லது ஆங்கிலப் பிரகடனத்துக்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்பவும்.

●

இந்தியன் ஹோமியோபதி
இன்ஸ்டிட்யூட்,

கும்பகோணம், தென் இந்தியா

**சகல விதமான வலிகளையும் 10 நிமிஷங்களில் நிறுத்த**





# யாருக்கு வெற்றி?

பாசு

போர் முரசு முழங்கியது. வீரர்கள் யாவரும் யுத்த சன்னத்தராய்ப் போர் முனைக்குச் செல்லத் தயாரானார்கள். இவ்வளவு களேபரத்திற்கும் காரணம் மொகலாய வீரர்கள் மஹ்ரூப்கான் தலைமையில் ராஜபுதனத்தின் தலை நகரை நோக்கி வந்து கொண்டிருந்ததுதான்.

ராஜபுதன மெங்கும் வீரர்கள் யாவரும் யுத்த வெறி கொண்டு உற்சாகத்துடன் கிளம்பிக்கொண்டிருக்கையில், மீவார் அரண்மனை நந்தவனத்தில் தடாகத்தின் படிகளில் தலையில் கைகளை ஊன்றிக் கொண்டு ராஜகுமாரி சாயா மிகவும் சோர்ந்த முகத்துடன் உட்கார்ந்துகொண்டிருந்தாள். அவ்வப்பொழுது ஓரிரண்டு சொட்டுக் கண்ணீர் தடாகத்தில் உதிர்ந்து நிச்சலனமாய் ஓடிக் கொண்டிருந்த அத் தடாகத்தின் அமைதியைக் குலைத்து அழகிய சிறு அலைகளை உண்டாக்கியது. அவள் இந் நிலையிலேயே எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தாளோ, தெரியாது. திடீரென்று தண்ணீரில் ஒரு நிழல் தோன்றவே திடுக்கிட்டுத் திரும்பினாள். அவளுக்குப் பின்னால் ஜயசிங் போர்க் கோலத்துடன் நின்றுகொண்டிருந்தான். ஜயசிங் வேறு யாருமில்லை; சாயாவின் மாமன் மகன்தான்.

"என்ன, சாயா! ஏன் கண்கள் கலங்கியிருக்கின்றன? யாவரையும் உற்சாகப்படுத்தி வீரமூட்டி யுத்தத்திற்கு அனுப்ப வேண்டிய நீயே கண் கலங்கினால் அப்புறம் நான் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது?"

"ஜயசிங்! நான் என்ன செய்வேன்? என் மனதை நான் எவ்வளவு அடக்கியும் அது என்னையும் மீறியல்லவோ அல்லற் படுகிறது. மொகலாய சேனை எங்கே, நமது ராஜபுத்திர படை எங்கே? இரண்டிற்கும் ஒரு மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசமல்லவா இருக்கிறது?"

"சாயா! ஏன் இப்படி சுற்றி வளைத்துப் பேசுகிறாய்? உனது காதலன் பிரதாப் சிங்கைப் பற்றிக் கவலைப்படுகிறாய் என்பதை வெளிப்படையாய்ச் சொல்லி விடலாமே!" என்று ஜயசிங் அவளைக் குறும்பாய்க் கேட்டான்.

சாயாவின் முகம் நாணத்தால் சிவக்கத் தலை குனிந்தாள். அதே சமயத்தில் ஜயசிங்கின் கண்களில் மின்னல்போல் சோகத்தின் சாயை படர்ந்து மறைந்தது.

சாயாவின் முகம் நிமிர்ந்தது. "ஏன், அத்தான்! பிரதாபருக்கு ஒன்றும் நேராதே? எனக்கு அதை நினைக்கும் பொழுதே வயிற்றை சங்கடப்படுத்துகிறது" என்றாள். அவள் குரல் கம்மியது.

சாயாவின் வருத்தத்தைப் பார்க்கவும் ஜயசிங்கின் மனம் இளகிவிட்டது. "சாயா! இது என்ன அசட்டுத்தனம்? வீணாய் மனதைக் கலக்க அடித்துக் கொள்ளாதே. பிரதாபனை உயிருடன் உன்னிடம் ஒப்படைப்பது என்னுடைய பொறுப்பு. சாயா, உனக்காகவும், உன் அன்பைக் கவர்ந்த பிரதாப் சிங்கிற்காகவும் என் உடல், பொருள், ஆவி யாவையும் தியாகம் செய்யத் தயார். சாயா, எப்படி இருந்தாலும் இந்த அசட்டு அம்மாஞ்சியை மாத்திரம் மறந்து விடாதே. இன்னும் கொஞ்ச நாட்களில் உனக்கு சம்சார பந்தம் ஏற்பட்டு நீ கிருஹத்தின் லக்ஷ்மியாய் விளங்குவாய். அப்பொழுது முகத்தில் பெருமை தோன்ற, கண்களில் காதல் பொங்க தன் கிருஹ ராணியை ஒரு முகம் நோக்கும் பொழுது, உனது சந்தோஷத்திற்காக, உயிரையும் திரணமாக ஒருவன் பாவித்தான் என்பதை மாத்திரம் ஞாபகம் வைத்துக் கொள். இது தான் என்னுடைய கடைசி வேண்டுகோள்!" என்று கூறி விட்டு, அவளுடைய விடையைக் கொஞ்சங்கூட எதிர்பாராமல் 'விர்' ரென்று திரும்பிச் சென்று விட்டான்.

ஜயசிங்கின் அசுவம் வெகு வேகமாய்ப் போர்முனையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. ஜயசிங்கின் முகத்தில் மாத்திரம் உற்சாகமே காணப்படவில்லை. அவன் உடல் மாத்திரம் அங்கிருந்ததே தவிர, உயிரெல்லாம் சாயாவிடம் தான் இருந்தது.

ஜயசிங் சாயாவை மனப்பூர்வமாகக் காதலித்தான். ஆனால் சாயாவோ அவனைத் தன் சகோதரன் போலப் பாவித்தாள். தன் மனதை எல்லா விதங்களிலும் ஜயசிங்கை விட மேற்பட்டவனாய்த் தோன்றிய பிரதாபசிங்கிடம் ஒப்படைத்து விட்டாள் சாயா. பிரதாபசிங்கும் சாயாவிடம் தன் மனதைப் பறி கொடுத்து விட்டான். இவ்விஷயம் ராணா வட்டத்தில் ஜயசிங்கிற்குத் தெரிந்தது. சாயா தனக்குத்தான் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்த அவனுக்கு இந்த விஷயம் எவ்வளவு ஆத்திரத்தையும் ஏமாற்றத்தையும் உண்டாக்கியிருக்கு மென்பதை நாமே ஊகித்துக் கொள்ளலாம். அவனுக்கு ஒவ்வொரு சமயம் பிரதாபசிங்கை அப்படியே இரண்டு துண்டாய் வெட்டி விடலாமா என்றுகூடத் தோன்றும்.

மொகலாய வீரரின் படையெடுப்பு ஜயசிங்கின் தினவெடுத்த தோள்களுக்கு உற்சாகத்தை யளித்தது. போரில் மொகலாயரைப் புறங்காட்டி ஓடச் செய்து, பிரதாபசிங்கை எப்படியாவது மட்டந் தட்டி ராஜபுத்திர வெற்றியை காட்டி, ராணாவிடமிருந்து அதற்குச் சன்மானமாக சாயாவை அடைய வேண்டுமென்று நிர்மானித்தான்.

மொகலாய வீரருக்கும் ராஜபுத்திர வீரருக்கும் மீவாரிலிருந்து ஐம்பது மைலுக்கு அப்புறம் போர் நிகழ்ந்தது. போரில் அநேகமாய் மொகலாயரே வெற்றி பெற்றன ரென்று சொல்ல வேண்டும். ராஜபுத்திர படையின் ஒரு பாகத்தை நடத்திச் சென்ற பிரதாபசிங் கை சோர்ந்து விட்டான். அவனது அசுவம் போரில் காயமுற்று முன்னே செல்ல மாட்டாமல் தவித்தது. தலைவன் கை சளைத்தது என்றதும், மற்ற வீரர்களும் சளைத்து விட்டார்கள். சிலர் புறங்காட்டியே ஓட ஆரம்பித்து விட்டார்கள். பிரதாபசிங் தன் படைக்கலங்களை உதறி யெறிந்து சரணாகதி அடையவும் சித்தமாய் விட்டான். மொகலாய வீரர்கள் வெற்றி கோஷத்துடன் ராஜபுத்திர சைன்யத்தைச் சின்னா பின்னப்படுத்த ஆரம்பித்தனர். இந்தச் சமயத்தில் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் ஒரு பெரிய சைன்யம் கிளம்பி மொகலாயரைப் பின்புறத்திலிருந்து தாக்கியது. அச் சைன்யத்தை நடத்திய வீரன் வேறு யாருமில்லை; ஜயசிங்தான். ஜயசிங்கின் சேனை ஒரு நிமிடத்தில் மொகலாய வீரர்களை சின்னாபின்னப் படுத்தி விட்டது. பிரதாபசிங்கின் சைன்யம் முன்புறமும் ஜயசிங்கின் சேனை பின்புறமுமாகத் தாக்கவே, மொகலாய சேனையின் பாடு திண்டாட்டமாகி விட்டது. மாலையில் கதிரவன் மறைடம் சேர்ந்திற்குள் போர் முடிந்து விட்டது. மொகலாய வீரர் புறங்காட்டி ஓடினர். அவர்கள் தலைவன் மஹ்பூப்கான் உடல் வேறு, தலை வேறாக போர்க்களத்தில் உருண்டான். ஜயசிங்கின் வீரர்கள் மொகலாய வீரரைத் துரத்திக்கொண்டு ஓடினர்.

ஜயசிங் 'உஸ் அப்பாடா!' என்று தன் நெற்றியில் வழிந்த இரத்தத்துடன் கூடிய வேர்வையைத் துடைத்துக்கொண்டு, முகத்தில் வெற்றிக் களை தோன்ற, அதரங்களில் புன்னகை அரும்ப, தன் குதிரையில் அமர்ந்த வண்ணம் கம்பீரமாய்ப் போர்க்களத்தைப் பார்வையிட்டான். கீழே உருத் தெரியாமல் மொகலாய வீரரின் பிரேதங்கள் உருண்டு கிடந்தன. இறந்து கிடந்த ராஜபுத்திர வீரர்களின் முகத்தில் வீரப் புன்னகை தாண்டவமாடியது. ஜயசிங் இவைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டே வருகையில் திடீரென்று அவன் முகம் மாறியது. அவன் வீராவேசத்துடன் உடை வாளை உருவினான். இதற்குக் காரணம் ஒரு மொகலாய வீரனும் ஒரு ராஜபுத்திர வீரனும் வாட் சண்டை புரிந்து கொண்டிருந்தது தான். ஜயசிங் தன் குதிரையை அந்தத் திக்கு நோக்கிச் செலுத்தினான். நெருங்க நெருங்க ராஜபுத்திர வீரன் யார் என்பது அவனுக்குப் புலனாயிற்று. வீரன் யாருமில்லை; பிரதாப்தான். அவன் தோளிலிருந்து இரத்தம் ஆறாய்ப் பெருகிக் கொண்டிருந்தது. உடம்பெல்லாம் காயங்களால் சல்லடைக் கண்ணாயிருந்தது. பிரதாப் இருந்த நிலைமையில் அவன் எந்த நிமிடத்தில் ஸ்மரணையற்றுக் கீழே விழுவானோ என்றிருந்தது.

இக்காட்சியைப் பார்த்ததும் ஜயசிங்கிற்கு ஒரு நொடியில் பதினாயிரம் எண்ணங்கள் தோன்றி மறைந்தன. ஒரு மனம், "பிரதாப் அந்த மொகலாய வீரன் கையாலேயே மரண மடையட்டும். அப்பொழுது சாயா உன்னுடையவள்தான் என்பதைப் பற்றி

ஜயமேயில்லை. பிரதாப் உயிருடன் இருக்கு மட்டும் சாயா உனக்குக் கிட்டமாட்டாள்" என்றது!

ஆனால் அடுத்த கணமே அவன் மனக்கண் முன் தடாகத்தினருகில் சோகமே உருவாய்க் கண்கள் கலங்கி ஏங்கி நின்ற சாயாவின் உருவம் தோன்றி மறைந்தது. அப்பொழுது தான், "உனக்காகவும், உன் அன்பைக் கவர்ந்த பிரதாப் சிங்கிற்காகவும் என் உடல், பொருள், ஆவி இம் மூன்றையும் தியாகம் செய்யத் தயார்" என்று கூறிய வார்த்தைகள் காதுகளில் ஒலித்தன.

ஜயசிங் தலை நிமிர்ந்தான். பிரதாப் சிங்கின் கால்கள் தள்ளாடின. கையிலிருந்த வாள் நழுவிவிட்டது. அவன் தலை சுழன்றது. மொகலாய வீரன் இதுதான் சமயமென்று கருதித் தன் வாளை அவன் மார்பில் பாய்ச்சத் தயாரானான். வாளும் பாயும் நேரம். அதே சமயத்தில் 'கில்' என்று கத்திக்கொண்டே இருவருக்கும் நடுவில் பாய்ந்தான் ஜயசிங். மொகலாய வீரனின் வாள் ஜயசிங்கின் மார்பில் பாய்ந்தது. அடுத்த கணமே மொகலாயனின் தலையும் உருண்டது. வெற்றி கோஷத்துடன் ராஜபுத்திர வீரர் தலைநகருக்குள் நுழைந்தனர்.

போர் முடிந்த மறுநாள், ராணா வீரர்களுக்குச் சன்மான மளிக்க வேண்டி, தர்பாரைக் கூட்டினார். வீரர்கள் யாவரும் கூடியிருந்தனர். ராணா, ராஜபுத்திர சைன்யத்தின் வீரத்தை மெச்சி வெற்றிக்கெல்லாம் காரணமாயிருந்த பிரதாப சிங்கை மிகவும் பாராட்டி அவனுக்கு வைரங்கள் பதித்த வீர வாளொன்றைப் பரிசளித்துவிட்டு, சபையோரை நோக்கி, "சபையோர்களே, நமது நாட்டை துஷ்டர்களிடமிருந்து காத்த இவ் வீரனுக்கு இவ்வுடைவாளை மாத்திரம் கொடுத்தால் போதாது; இவ் வீரனுக்கே என் மகள் சாயாதேவியை மணம் செய்விக்கப் போகிறேன்" என்று சொல்லி முடித்தார். இவ் வார்த்தைகளைக் கேட்டதும் சபையோர் ஆரவாரித்தனர். பிரதாப் சிங் முகத்தில் ஆனந்தம் பொங்க, ஸ்திரீகள் கூடியிருந்த மாடத்தின் பக்கம் நோக்கினான். சாயாதேவி முகத்தில் அளவில்லா சந்தோஷம் தோன்ற வெட்கத்துடன் அவனைக் கடைக் கண்ணால் பார்த்தாள்.

இந்தச் சமயத்தில் ஆரவாரத்தைக் கிழித்துக்கொண்டு ஒரு குரல், "அநியாயம்! அநியாயம்!" என்று கிளம்பியது. இவ் வார்த்தைகளைக் கேட்டதும் சபையில் குழப்பம் ஏற்பட்டது. கூட்டத்தை தள்ளிக்கொண்டு ஓர் கிழப் போர் வீரன் முன்வந்து ராணாவை வணங்கி, "மஹாராஜா! உண்மையில் கௌரவத்துக் குரியவர் வேறொருவர் இருக்க, சண்டையில் தோற்ற இவருக்கு நீர் சன்மானமளிக்கிறீர்! இது நியாயமா?" என்றான்.

ராணாவிற்கு ஒன்றுமே புரியவில்லை. "என்ன, நீர் சொல்லுவது ஒன்றுமே விளங்கவில்லையே. கௌரவத்துக் குரியவர் யார் என்பதை விவரமாய்ச் சொல்லும். உமக்குப் புத்தி பேதலித்து விட்டது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. வீரர்களை வெற்றியுடன் நடத்தியவர் பிரதாப் இல்லாமல் வேறு யார்?" என்றார்.

கிழவீரன், "போர்க்களத்தில் சரணாகதியடையத் தயாராயிருந்தவர் இவ் வீர பிரதாப



ஸிங். அந்தச் சமயத்தில் சமயசஞ்சீவியாய் ஜயசிங் தோன்றி, மொகலாயரை முறியடிக்காமல் இருந்திருந்தால் இப்பொழுது மொகலாயர்தான் வெற்றியுடன் ராஜ சபையில் கூடியிருப்பார்கள். நமது பிரதாப ஸிங் கைதியாய் நின்று கொண்டிருப்பார்!" என்றான்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் பிரதாப ஸிங்கின் முகம் பிரேதம் போல் வெளுத்து விட்டது. சாயாவின் நிலைமையைப் பற்றிக் கூறவேண்டியதில்லை. ராணாவிற்கோ எது நியாயமென்றே புரியவில்லை. ராணா ஒன்றும் தோன்றாமல் பிரதாபனின் பக்கம் திரும்பி, "பிரதாப் ஸிங், இதற்கு என்ன சொல்கிறீர்?" என்று கேட்டார். "பிரதாப் ஸிங்கிற்கு உண்மையைக் கூறி, தண்டனையை ஏற்றுக் கொள்ளலாமென்று தோன்றியது. ஆனால் அடுத்த கணமே சாயாவின் தோற்றம் அந்த எண்ணத்தை அறவே அகற்றிவிட்டது. சிறிது தயங்கிவிட்டு ராணாவைப் பார்த்து, "சான்றுகளைக் கொண்டுதான் எதையும் நிச்சயிக்க வேண்டும்" என்று கூறினான். ஸிழ வீரன் உடனே, "மஹாராஜ், இதற்குச் சான்று ஜயசிங்தான். அவரையே நீங்கள் கேளுங்கள்!" என்றான்.

பிரதாப் உடனே, "ஜயசிங்கின் வார்த்தைகள் எப்படிச் சான்றாகும்? அவன் உண்மையை மறைத்தாலோ......?"



சிறை விசிட்டர் :— என்னப்பா ! நீ நல்ல ஸ்திதியிலே இருந்ததாகச் சொல்கிறாயே. உன் வீழ்ச்சிக்குக் காரணமென்ன ?

கைதி :— ஒரு வாழைப்பழத் தோலுதானுங்க. ஓடறபோது அது சிக்கிவிட்டுக் கீழே விழுந்தேன். பின்னால் ஓடிவந்த போலீஸ்காரன் சட்டென்று பிடித்துக் கொண்டு விட்டான், சாமி!

"எந்த ராஜபுத்திரன் வாயிலும் ஒருக்காலும் பொய் வராது. அதிலும் ஜயசிங்கின் வார்த்தைகளைப் பற்றி ஐயமே வேண்டாம்" என்றான் ஸிழ வீரன்.

அடுத்த கணமே ஜயசிங் பல்லக்கில் கொண்டு வரப்பட்டான். அவனது உயிர் உடலில் ஊசலாடிக் கொண்டிருந்தது. ராணா ஜயசிங்கைப் பார்த்து, "ஜயசிங், ஸிழவீரன் கூறுவது உண்மையா? வெற்றிக் குரியவன் நீயா? இல்லை பிரதாபா?" என்று கேட்டார்.

சபையில் ஒரே நிசப்தம். யாவரும் வெகு ஆவலுடன் ஜயசிங்கின் வாயிலிருந்து என்ன வருமோ என்று அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜயசிங்கின் பார்வை முதலில் சபையைச் சுற்றிச் சென்று பிரதாபிடம் லயித்தது. பிரதாப் கெஞ்சும் பாவனையில் அவனைப் பார்த்தான். அவனிடமிருந்து ஜயசிங்கின் பார்வை சாயாவிடம் சென்றது. சாயாவின் பார்வையில், "ஐயோ! என் காதலனுக்கு ஒரு தீங்கும் ஏற்படும்படி செய்யாதே!" என்று சொல்லுவது போலிருந்தது.

ஜயசிங்கின் மௌனத்தைப் பார்த்து ராணா, "ஜயசிங், கேள்விக்கு உடனே பதிலளியும். வெற்றிக்கும் அதற்குரிய கௌரவத்திற்கும் உரியவர் நீரா, இல்லை பிரதாபா?" என்றார் மீண்டும்.

"மகாராஜ்! என்னை ஏன் இப்படி சோதிக்கிறீர்கள்? கௌரவத்திற்காக என் நாவு பொய் சொல்லவும் துணிந்து விடும் போலிருக்கிறதே!" என்றான் ஜயசிங்.

"அப்படியானால் வெற்றிக்குரியவன் பிரதாப்தானே" என்றார் ராணா.

"ஆம்" என்று தோன்றும் பாவனையில் தலையை அசைத்தான் ஜயசிங். உடனே அவனையுமறியாமல் அவன் பார்வை மேன் மாடத்தின் பக்கம் சென்றது. சாயாவின் முகத்தில் இருந்த நிழல் நீங்கி, பிரகாசம் தோன்றியது. முத்துப் போன்ற பற்கள் வெளியே தெரிந்தன. அவள் கவலை நீங்கியது. அக்கண்களில் குறும்பும் கனிவும் தோன்றியது. மந்தஹாசவதனத்துடன் தன் காதலன் பக்கம் திரும்பினாள். பிரதாப் கண்களில் நன்றியறிதல் தோன்ற, ஜயசிங்கை நோக்கினான். அடுத்த கணமே அக்கண்கள் காதலியைத் தேடிச் சென்றன. இருவர் கண்களும் அன்புடன் சந்திப்பதைப் பார்த்தான் ஜயசிங். அவன் மனதில் சாந்தி உண்டாயிற்று. "வார்த்தையைக் காப்பாற்றினேன்" என்ற திருப்தியுடன் அவன் ஆவிபிரிந்தது.

# காலக்ஷேபம்

### காரணம்

எலக்ட்ரிக் ரயிலிலிருந்து இறங்கி வந்த ஒருவர் அதற்கு முதல் நாள் வாங்கின டிக்கட்டை டிக்கட் கலெக்டரிடம் கொடுத்தார். அவர் அதைப் பார்த்துவிட்டு "ஏனய்யா, நேற்று வாங்கின டிக்கட்டை இன்று கொடுக்கிறீர்?" என்று கேட்டார்.

அவர், "நேற்று இதை உங்களிடம் கொடுக்க மறந்துவிட்டேன். அதை இன்றாவது கொடுத்து விடலாமென்றுதான் வந்தேன்" என்றார்.

—ஏ. கிருஷ்ணமூர்த்தி.

★

### முதல் கேள்வி!

ராமு:—அடே! உனக்கு ஸைகிள் விடத் தெரியுமாடா?

பஞ்சு:—தெரியாதுடா!

ராமு:—அப்படியானால் என் ஸைகிளைக் கொஞ்சம் பார்த்துக்கொள். நான் இந்த ஹோட்டலில் காப்பி சாப்பிட்டுவிட்டு வந்துவிடுகிறேன்.

—ஏ. என். ஸ்ரீநிவாசன்.

★

### கமிஷன்

ஒரு பையன் (டாக்டரிடம்):— ஏன் ஸார்! உங்களிடம் ஒரு நோயாளியைக் கூட்டிக் கொண்டு வந்தால் கமிஷன் கொடுப்பீர்களா?

டாக்டர்:— ஓ! பேஷாகத் தருவேன்; எங்கே அந்த நோயாளி?

பையன்:— அந்த நோயாளி நான்தான் ஸார்! முதலில் கமிஷனைக் கொடுங்கள்!

—ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி.

★

### ஆச்சரியம்

கிராமத்திற்குப் புதிதாய் விஜயம் செய்த ஒருவர், அங்கிருந்த ஒரு கிழவனைப் பார்த்து, "உமக்கு என்ன வயது?" என்று கேட்டார்.

கிழவன்:—அறுபத்தேழு.

அவர்:—அப்படியா? ரொம்ப ஆச்சரியமாயிருக்கே! உங்கப்பா இறக்கும்போது அவருக்கு என்ன வயது?

கிழவன்:—அவர் இன்னும் இறக்கவில்லை. அதோ உள்ளே உட்கார்ந்து அவருடைய தாத்தாவுக்குக் கதை படித்துக் காண்பித்துக் கொண்டிருக்கிறார்!

—ஸ்ரீ. என்.

### ரோஜாப்பூ திருடினால்?

தோட்டக்காரன்:—ஏண்டா, வாழைக்காய் திருடியதற்கு வாழைக்காயைக் கழுத்தில் கட்டிக்கொண்டு ஊர் சிரிக்க ஊர்வலம் வந்தாயே! இன்னுமா திருடுகிறாய்?

ரோஜாப்பூ திருடியவன்:— அதற்குத்தான் இன்று ரோஜாப்பூ திருடுகிறேனுங்க!

—ஸ்ரீ. சௌரிராஜன்.

★

### அதே போதும்

மானேஜர்:—இங்கே வேலை காலி யில்லை என்று சொல்லுவதற்கு ஒரு ஆள் போட வேண்டும் போலிருக்கே.

வேலை கேட்பவன்:—அந்த வேலையை நான் பார்த்துக்கிறேன். அதுவே போதும்.

—வி. ரங்கசாமி.

★

### அவசியமில்லை!

ஒருவர்:—உங்கள் கம்பெனி வாசலில் எவரையுமே காணவில்லையே. காவலுக்கு எவரையாவது கூப்பிட்டு வேலைக்கு வைப்பது தானே?

நண்பர்:—காவலுக்கு வாசலில் ஆள் போட வேண்டிய அவசியமில்லை. எங்கள் கம்பெனி வாசலில் பஸ் ஸ்டாண்டு இருப்பதால் எப்போதும் யாராவது அங்கே நின்றுகொண்டு இருப்பார்கள்!

—ஜா. ஆ.

★

"ஏன் ஸார், வீடு காலியாகும்போல் இருக்கே? காலியாகிற விஷயத்தை யாரிடமும் சொல்லிவிடாதீர்கள். உங்கள் வீட்டுக்கு நான் குடி வந்துவிடுகிறேன்."



"இல்லே ஐயா, இந்த ஒரு வண்டி காலி பண்ணின சாமான்களை ஏற்றிச் செல்லுகிறது. இன்னொன்று குடி வரப்போகிறவர் சாமான்களை ஏற்றி வந்திருக்கிறது!"—கே. ஆர். கே.

# துரியோதனன் அவமானப்பட்டது

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

பெரிய சேனையும் பரிவாரமும் கூட்டிக் கொண்டு கௌரவர்கள் த்வைத வனம் சென்றார்கள். பாண்டவர்களுடைய கஷ்ட நிலைமையைக் கண்ணால் பார்த்து ஆனந்தம் அடைவோம் என்று துரியோதனனும் கர்ணனும் அடக்க முடியாத மகிழ்ச்சியுடன் போய், பாண்டவர்கள் இருந்த இடத்துக்கு நான்கு நாழிகை தூரத்தில் தங்களுடைய பரிவாரத்துக்கும் இடம் பார்த்து விடுதிகளும் அமைத்துக் கொண்டார்கள்.

அங்கங்கே இருந்த மாட்டு மந்தைகளையெல்லாம் பார்த்து எண்ணி, அடையாளமிட்டார்கள். பசுக்களையும் காளைகளையும் கன்றுகளையும் கணக்கெடுத்தான பிறகு இடைச் சேரிகளில் ஆட்டமும் நர்த்தனமும் பார்த்து மகிழ்ந்தார்கள். அதன் பிறகு, காட்டிலுள்ள மிருகங்களை வளைத்து வேட்டையாடினார்கள்.

வேட்டையாடிக் கொண்டே சென்ற துரியோதனன் பாண்டவர்களுடைய ஆசிரமத்தண்டை இருந்த தடாகத்தை அடைந்தான். அங்கேயே சில நாள் தங்கலாம் என்று தன் பரிவாரத்துக்கு உத்தர விட்டான்.

•    •    •

துவைதவனத்துத் தடாகத்தண்டை கந்தர்வராஜன் சித்திரசேனனும் அவன் பரிவாரமும் வந்து தங்கியிருந்தார்கள். துரியோதனனுடைய உத்தியோகஸ்தர்களை "இவ்விடம் நீங்கள் தங்கக் கூடாது; போங்கள்" என்று கந்தர்வர்கள் தடுத்து விட்டார்கள். அவர்கள் துரியோதனனிடம் சென்று தடாகத்தண்டை வேறு யாரோ சிற்றரசன் தன் பரிவாரத்தோடு இருப்பதாகவும், தங்களைத் தடுத்ததாகவும் சொன்னார்கள்.

துரியோதனன் கோபங் கொண்டு "என் உத்தரவைத் தடுக்கும்படியான அரசன் யார்? திரும்பிப் போய் அவர்களைத் துரத்தி விட்டு மறு காரியம் பாருங்கள்" என்றான்.

அவ்வாறே வேலைக்காரர்கள் தடாகத்தண்டை போய் விடுதிகள் கட்ட ஆரம்பித்தார்கள். கந்தர்வர்கள் அவர்களை அடித்து விரட்டி அப்புறப் படுத்தி விட்டார்கள்.

துரியோதனனுக்கு இந்தச் செய்தி எட்டியதும் மகா கோபங்கொண்டு பெருஞ் சேனையோடு தடாகத்தண்டை இருக்கும் குறும்புக்காரர்களையெல்லாம் துவம்சம் செய்துவிடப் போனான்.

கந்தர்வர்களுக்கும் துரியோதனன் படைக்கும் பெரும் யுத்தம் நடந்தது. முதலில் சாதாரண முறையில் யுத்தம் நடந்தது. அதில் கந்தர்வர்கள் தோல்வியடைந்தார்கள். இது தெரிந்ததும் கந்தர்வ ராஜனான சித்திரசேனன் கோபங்கொண்டு தன்னுடைய மாயா அஸ்திரங்களைப் பிரயோகித்தான். கர்ணனுடன் மற்ற கௌரவ வீரர்களும் தேரும் ஆயுதமும் இழந்து புறங்காட்டி ஓட வேண்டியதாயிற்று. துரியோதனன் மட்டும் ஓடாமல் யுத்தகளத்தில் நின்றான். சித்திரசேனன் அவனை உயிருடன் பிடித்துக் கயிற்றால் கட்டி, தன் ரதத்தில் தூக்கிப் போட்டுக் கொண்டு சங்கநாதம் செய்தான். இவ்வாறே கௌரவ வீரர்களில் முக்கியமானவர்களையெல்லாம் கந்தர்வர்கள் சிறைப் படுத்தினார்கள். கௌரவ சேனைத் தலைவர்கள் திகில் அடைந்து பாண்டவர்களுடைய ஆசிரமத்தில் ஓடி முறையிட்டார்கள்.

•    •    •

பீமனுக்குச் சந்தோஷம் பொங்கிற்று. "நாம் செய்ய வேண்டியதை இந்தக் கந்தர்வர்கள் செய்தார்கள். நம்மைப் பார்த்து ஏளனம் செய்யவந்த இந்தத் துரியோதனனுக்குத் தகுந்த சிட்சை ஏற்பட்டது. சக்தியற்றவர்களைப்

பார்த்துப் பகைக்கும் நீசர்களை யாரும் இகழ்வார்கள். நாம் செய்ய வேண்டிய பொறுப்பை இந்தக் கந்தர்வ நண்பன் ஏற்றுக் கொண்டான். அவனுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும்" என்று பீமன் தன் மகிழ்ச்சியை யுதிஷ்டிரனிடம் தெரிவித்துக் கொண்டான்.

"அப்பனே! நீ மகிழ்வது சரியல்ல. சிறுமைக்கு இது சமயமல்ல. நம்முடைய குலத்தவர்கள் சிறைப்பட்டு இருப்பதையறிந்து நாம் சும்மா இருக்கலாகாது. போய் துரியோதனனை விடுவிப்பாயாக!" என்றான் தருமபுத்திரன்.

பீமனுக்கு யுதிஷ்டிரன் சொன்னது பிடிக்கவேயில்லை.

"நம்மை வஞ்சித்து அரக்குமாளிகையில் எரித்துக் கொல்லப் பார்த்த இந்தப் பாதகனை நான் ஏன் போய் மீட்க வேண்டும்? என் உணவில் விஷம் கலந்து என்னைக் கட்டிப் போட்டுக் கங்கையில் மூழ்க வைத்துச் சாகடிக்கப் பார்த்த இந்தத் துரியோதனன்மேல் ஏன் இரக்கம் கொள்கிறீர்? திரௌபதியைச் சபையின் முன் இழுத்து அவமானம் செய்த இந்தக் கொடிய நீசர்களிடம் ஏன் சகோதர பாவம் வைக்க வேண்டும் என்கிறீர்?" என்றான்.

அந்தச் சமயத்தில் பிடிபட்ட துரியோதனனுடைய கூக்குரல் கேட்டது. தர்மபுத்திரன் பரபரப்புடன், "பீமனுடைய ஆட்சேபனை தகாது" என்று சொல்லித் தம்பிகளை உடனே போய்க் கௌரவர்களை மீட்டுக் கொண்டுவர உத்தரவிட்டான்.

இதன்மேல் பீமனும் தனஞ்சயனும் தோல்வியடைந்த கௌரவர்களுடைய சேனையைக் கூட்டிக் கொண்டு போய்க் கந்தர்வர்களுடன் யுத்தம் துவக்கினார்கள்.

பாண்டவர்கள் வந்ததும் சித்திரசேனன் தன் கோபத்தை விட்டான். "துராத்மாக்களான கௌரவர்களுக்குப் பாடம் கற்பிக்கத்தான் இவ்வாறு செய்தேன்" என்று சொல்லி, கட்டுகளை அவிழ்த்து விட்டு, "ஊருக்கு உடனே போங்கள்" என்று துரியோதனாதியர்களை அனுப்பி விட்டான். அவமானப்பட்ட கௌரவர்களும் அஸ்தினாபுரத்துக்கு விரைவாகத் திரும்பினார்கள். ஓடிப் போன கர்ணன் துரியோதனனை வழியில் சந்தித்தான்.

"கர்ணனே! நான் அந்தச் சித்திரசேனனால் கொல்லப்பட்டு மாண்டு போயிருந்தால் நன்றாயிருந்திருக்கும்" என்றான் துரியோதனன்.

கர்ணன் என்ன சமாதானம் சொல்லியும் துரியோதனன் கேட்கவில்லை. "நான் இவ்விடமே பிராயோபவேசம் செய்வேன். துச்சாதனா! நீ பட்டம் பெற்றுக் கொண்டு ராஜ்யத்தை ஆள்வாய். பகைவர்கள்முன் பரிகசிக்கப்பட்டு இனி என்னால் உயிர் வைத்துக் கொண்டிருக்க முடியாது" என்றான்.



துச்சாதனன் அண்ணன் காலைப் பிடித்துக் கொண்டு வேண்டாம் என்று அழுதான். இவ்வாறு சகோதரர்கள் புலம்பிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கர்ணனுக்குப் பொறுக்கவில்லை.

"குரு வம்சத்தவர்களே! இது உங்களுக்குத் தகாது. அற்பர்களைப் போல் ஏன் புலம்புகிறீர்கள்? சோகத்தில் என்ன நன்மையைக் காண்கிறீர்கள்? தைரியத்தை அடையுங்கள். நீங்கள் துயரப்பட்டால் உங்களுடைய பகைவர்களுக்கு அதில் மகிழ்ச்சி உண்டாகுமே ஒழிய வேறு பயனில்லை. பாண்டவர்களைப் பாருங்கள்! அவர்களுக்கு நேர்ந்த அவமானங்களைக் கண்டு

"அவர்கள் பிராயோபவேசம் செய்ய வில்லை" என்றான் கர்ணன்.

சகுனியும் பேச ஆரம்பித்தான். "கர்ணன் சொன்னதைக் கேள். பாண்டவர்களிடம் பறிக்கப்பட்ட ராஜ்யமும் பொருளும் நீ அனுபவிக்க வேண்டியதாயிருக்க நீ உயிரைத் துறக்க வேண்டும் என்கிறாய்? உன்னுடைய யோசனை விபரீதமாக இருக்கிறது. எழுந்து வா. அல்லது இதுவரையில் செய்ததற்கு வருத்தப்படுவதாயிருந்தால் பாண்டவர்களோடு சிநேகம் செய்து கொண்டு அவர்களுக்கு ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டுச் சுகத்தை அடை" என்றான்.

இந்தப் பேச்சைக் கேட்டதும், துரியோதனனுக்கு மறுபடியும் துர்ப்புத்தி மேலோங்கிற்று. அதுவரையில் தான் சொல்லி வந்தது ஏதோ கனவுபோல் தோன்றிற்று. "பாண்டவர்களை ஜயிப்பேன்" என்று கத்தினான்.

"பேஷ்!" என்றான் கர்ணன்.

"மரணத்தில் என்ன நன்மை இருக்கிறது? உயிரோடு இருந்தாலல்லவோ நன்மைகளை அடையலாம்?" என்று சொல்லிக் கர்ணன் துரியோதனனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

எல்லாரும் நகர் திரும்பினார்கள். போகும்போது கர்ணன் "பதின்மூன்று வருஷங்கள் கழிந்ததும் நான் யுத்தத்தில் அருச்சுனனைக் கொல்வேன்" என்று கத்தியைத் தொட்டுத் துரியோதனனுக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்தான்.

---



"இன்ஸ்பெக்டர் ஸார்! 'நூறு ரூபாய் கொடுக்கிறாயா, இல்லாவிட்டால் உதைக் கட்டுமா?' என்று சோணாசலம் என்னை ஓயாமல் பயமுறுத்துகிறான். அந்தப் போக்கிரியை நீங்கள்தான் கவனிக்கணும்."

"போக்கிரியுடன் வீண் வம்பு எதற்கு? பேசாமல் அவன் கேட்கிற பணத்தைக் கொடுத்துத் தொலைத்து விடுங்களேன்!"

# படித்துப் பார்!

## கொழு

[ஆசிரியர்: மஞ்சேரி எஸ். ஈச்வரன்; பிரசுரம்: சக்தி காரியாலயம், சென்னை; விலை: ரூபாய் மூன்று.]

இனிமை ததும்பும் தமிழ்நாட்டுச் சிறு கதைகளை எழுதும் மஞ்சேரி ஈச்வரன் ஏன் ஆங்கிலத்தில் கதைகளை எழுதுகிறார் என்று நாம் ஆச்சரியப் படுவது உண்டு. ஆனால், யோசித்துப் பார்த்ததும், அவருக்குத் தமிழின் உள்ள அபிமானம்தான் இதற்குக் காரணம் என்று தோன்றுகிறது. அவரால் எழுத முடியாத தமிழ் பாஷையில் எழுதி, தமிழைக் கொலை செய்வதைவிட, ஆங்கிலத்திலேயே எழுதுவது மேலல்லவா? கதைக்குக் கதையுமாயிற்று; பாஷைக்கும் ஆபத்தில்லை!

மஞ்சேரி ஈச்வரனின் பதினொரு சிறு கதைகளைத் தமிழில் டாக்டர் வே. ராகவன், தி. ஜ. ர. இருவருமாக மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார்கள். ஆனால், Hamilton bridge அம்பட்டன் வாராவதியாகி, மீண்டும் Barber's bridge ஆனது போல் ஆகாமல், இந்த நூலில் உள்ள கதைகள் எல்லாம் அசல் தமிழ்க் கதைகளாகவே இருப்பது குறிப்பிடத்தக்க விஷயமாகும். நமது வாழ்க்கையில் இயற்கையாக நடக்கும் சம்பவங்களை வைத்துக் கொண்டு கவிநயமும் அழகும் ததும்பும் கதைகளை ஈச்வரன் சிருஷ்டித்திருக்கிறார். ஜெனரம்மா கதை ஒன்றிற்காகவே மூன்று ரூபாய் கொடுக்கலாம்.

## கட்டுரைக் கரும்பு

[ஆசிரியர்: வி. ஆர். எம். செட்டியார் பி.ஏ., பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், பாலக்கரை, திருச்சி; விலை ரூ. 2.]

இந்த நூலில் மேல்நாட்டுப் பிரபல கவிகளாகிய ஷெல்லி, எமர்ஸன், ப்ரௌனிங் இவர்களுடன் மகாகவி பாரதியார், யோகி சுத்தானந்த பாரதியார், தேசிக விநாயகம் பிள்ளை முதலிய தமிழ்நாட்டுக் கவிகளை ஒப்புமை காட்டும் பல விசிஷ்ட கட்டுரைகள் எழுதியிருக்கிறார் ஆசிரியர். சிறந்த ஆங்கில விமர்சகராகிய கோலரிட்ஜுடன் ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களை ஒப்பிட்டு எழுதியிருக்கும் கட்டுரை இந்நூலில் தலைமை வகிக்கிறது. இலக்கிய விமர்சனத்தின் பண்பை நன்கு விளக்கியிருக்கிறார்.

## ஸ்தோத்திரத் திரட்டு

[தொகுத்தவர்: திரு ஜெ. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி.ஏ., பி.எல்; வெளியீடு: பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்வாமி தேவஸ்தானம்; விலை: அணா 2.]

தேவாரம், திருவாசகம், திருப்புகழ் எல்லாவற்றையும் மறந்த ஒருவர் கோவிலுக்குப் போக நேர்ந்து, அங்கே பகவானை என்ன ஸ்தோத்திரம் செய்கிறது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கும் பரிதாபக் காட்சியைப் பார்த்துவிட்டுத்தான் ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை இந்த நூலைப் பிரசுரம் செய்திருக்கவேண்டும். இந்தச் சிறு நூல் சட்டைப் பையில் இருக்கும் வரை கோவிலுக்குப் போனால் என்ன ஸ்தோத்திரம் செய்வது என்ற கவலையே யாருக்கும் வேண்டியதில்லை.

# நாய் விற்ற பணம்

டாக்டர் எம். ஆர். ராமஸ்வாமி

வேலன், கந்துக்காரன் குப்புசாமியின் மகன். குப்புசாமி நாற்பத்தைந்தாவது வயதில் கை கால் வீங்கி ஒரு வருஷம் படுத்திருந்து இறந்துவிட்டான். வேலனை அவன் தாயாரும் தகப்பனும் செல்வமாய் வளர்த்தார்கள். பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான். தகப்பன் இறக்கும் பொழுது அவனுக்குப் பதினாறு வயதுதான். தகப்பன் நன்றாய் சம்பாதித்துக் கொண்டுதானிருந்தான். ஆனால் அவன் திடீரென்று நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டதால் வெளியில் கொடுத்த பணத்தை வசூலிக்க முடியவில்லை. மீந்தது ஊத்துக் குழிப் பக்கத்தில் கொஞ்சம் புன்செய் நிலமும் மாடுகளுந்தான். அதை வைத்துக் கொண்டு காலம் தள்ளுவது கஷ்டமாயிருந்தது. எல்லாம் வந்த விலைக்கு விற்றுப்போட்டு அவனுடைய தாயார் அவனைப் பக்கத்து ஊரில் ஒரு பருத்தி ஆலையில் சேர்த்து விட்டாள். இருபது வயதில் லக்ஷ்மியென்ற பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தாள்.

அவன் அந்த ஆலையில் சேர்ந்து நான்கு வருஷங்கள்தான் ஆகியிருக்கும். அவனுக்கு இருட்டில் வருவது பயமாயிருந்ததால் ஒரு நாயை வைத்திருந்தான். அது சிறு குட்டியாயிருக்கும் பொழுதே வாங்கி வளர்க்கப்பட்டது. கோம்பை என்று பெயரிட்டிருந்தார்கள். பழுப்பு நிறம். நல்ல வளர்த்தியுள்ளது. காதுகள் மடங்கியிருக்கும். முகத்தைப் பார்த்தால் நம்முடன் பேசுவது போலவும் பேசுவதைப் புரிந்து கொள்வது போலவும் தோன்றும். நல்ல சுறுசுறுப்புள்ளது.

கிழவிக்கு ஏதோ காய்ச்சல் கண்டது. அவள் படுத்துவிட்டாள். டாக்டரைக் கூப்பிட்டுப் பார்த்தும் பலனில்லாமல் போய்விட்டது. ஒரு மாசத்தில் இறந்துவிட்டாள். போகாத வேளைக்கு லக்ஷ்மி கர்ப்பிணியாக இருந்தாள். மாமியார் இறந்து ஒரு மாதத்திற்குள் பிரசவமாய் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றாள். இதற்கெல்லாம் ஏராளமாகப் பணம் செலவாயிற்று.

லக்ஷ்மி தன் புருஷனைப் பார்த்து, "இந்த நாயை விற்று விடுகிறதுதானே? நல்ல சாதி நாய்! பத்துப் பதினைந்து ரூபாயாவது வரும்" என்றாள்.

"பத்து ரூபாயாய்ப் போவானேன்? நேற்று மானேஜர் துரை ஐம்பது ரூபாய் தருகிறேன் என்று சொன்னார். நான் பார்க்கலாம் என்று சொல்லி வந்துவிட்டேன். நாம் அதை ஒரு குழந்தை போல் வளர்த்து மற்றவர்களுக்கு விற்றுவிடுவது என்றால் மனம் வரவில்லையே" என்றான் வேலன்.

"உனக்கு வேறு குழந்தைதான் நான் தந்திருக்கிறேனே. அதைச் சரியாய்ப் பார்த்தால் போதாதா? மேலும் மாரியம்மன் பண்டிகை வருகிறது. எனக்குப் புதுப் புடவையும், ஒரு தங்க ஓலையும் வாங்க வேண்டுமென்று வெகு நாளாய் ஆசை. உன் தாயார் இறந்து கொஞ்ச நாள்தானாயிற்றே என்று நான் உன்னைக் கேட்கவில்லை. நாயைப் பற்றி நீ விசனப்பட வேண்டியதில்லை. அருமையாய் வளர்த்த தாயார் என்னை உனக்குக் கட்டிக் கொடுக்கவில்லையா? உன்னைக் கட்டிக் கொண்டதால் நான் கஷ்டப்பட்டு விட்டேனா? இன்னும் சந்தோஷமாகத்தானே இருக்கிறேன்? இந்த நாயும் அந்தத் துரையிடம் சௌக்கியமாயிருக்கும். அதற்காக நீ விசனப்



பட வேண்டாம்'' என்று ஹீனமாக உப தேசித்துச் சிரித்தான்.

"நீ என்னைக் கேலி செய்கிறாயா? நல்லது, நீ புடவையும் ஓலையும் வாங்கிக் கொள்'' என்றான்.

மறுநாள் மத்தியானம் அவன் மில் மானேஜர் துரையைப் பார்த்தான். மானேஜர் பிரேட் துரை இந்தியாவில் பல வருஷங்களிருந்து பழகினவர். தமிழ் பேச வரும்.

"என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

"நீங்கள் என் நாயை வாங்கிக் கொள்கிறேனென்று சொன்னீர்களே; அதற்காக வந்தேன்.''

"எவ்வளவு பணம் வேண்டும்?''

"முதலில் ஐம்பது ரூபாய் கொடுப்பதாகச் சொன்னீர்கள்.''

"சரி, இந்த இருபது ரூபாயை எடுத்துக் கொள். மீதியை அப்புறம் தருகிறேன்'' என்று பையிலிருந்து அந்தத் தொகையை நோட்டுகளாக எண்ணித் தந்தார். வேலன் நாயை மானேஜருடைய ஆளிடம் தள்ளிவிட்டு இரவு வீடு வந்து சேர்ந்தான். பணத்தைப் பெண்சாதியிடம் கொடுத்தான். அவள் அதை முக மலர்ச்சியுடன் வாங்கிக் கொண்டாள். ஆனால் வேலனுக்குச் சந்தோஷமாக இருக்க முடியவில்லை. நாயை விட்டுப் பிரிந்தபோது அது பார்த்த பார்வை அவன் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது. பச்சைக் குழந்தையுடன் விளையாடுவதில் அதைப் பிறகு மறந்து விட்டான்.

வேலனின் துரதிர்ஷ்டம் ஏதோ புதிய யந்திரங்களைக் கொண்டு வந்து அதில் பழக்கமில்லாத ஆட்களை அந்த வேலையைச் செய்யச் சொன்னதால் நூல் சேதமாகி வேலையாட்களுக்கு அபராதம் போட்டார்கள். அதனால் இரண்டு மூன்று பேர் வேலைக்கு வராமல் போகச் சம்பளத்தைப் பிடித்ததினால் தகராறு ஏற்பட்டு, ஆலையில் வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அதில் வேலனும் சேர வேண்டி வந்தது. கட்சிச் சண்டை முற்றிற்று. கையிலிருந்த பணம் எல்லாம் செலவாய் விட்டது. பசிக் கொடுமை தாங்க முடியவில்லை.

துரையிடம் போய் நாய் வாங்கியதற்குக் கொடுக்க வேண்டிய பாக்கிப் பணத்தை வேலன் கேட்டான். நாய் அவரிடம் வந்ததுமுதல் தீனி தின்னாமல் விசனமாயிருந்தது. நாய் சுறுசுறுப்பாயில்லை, வீணாய் அதிகப் பணம் தர ஒத்துக் கொண்டோம், தன்னை





வேலன் ஏமாற்றி விட்டான் என்று கோபம் ஒரு பக்கம்; அவன் வேலை நிறுத்தத்தில் சேர்ந்தான் என்கிற கோபம் வேறு. எல்லாம் சேர்ந்து, இப்பொழுது துரையைப் பாதிக்க, அவர் வேலனைப் பார்த்து, "திருட்டுப் பயல்! இவ்விடத்தை விட்டு ஓடிப் போ'' என்று மிரட்டினார்.

வேலன் நடந்ததைத் தன் மனைவியிடம் சொல்லவில்லை. நல்ல காலத்தில் சந்தோஷமாய்ச் சிரிப்பார்கள்; ஆனால் புருஷனுக்குக் கஷ்டம் வந்தால் வாக்குவாதமும் தர்க்கமும் செய்து கஷ்டத்தை அதிகமாக்குவார்களே தவிர, விசனத்தைக் குறைக்கப் பெண்கள் வழி தேட மாட்டார்கள் என்பது அவனுடைய கொள்கை. அன்று அமாவாசை; நல்ல இருட்டு. ஒரு நீல வர்ண நிஜாரை யணிந்து, தலையையும் முகத்தையும் கறுப்புத் துணியால் மூடிக்கொண்டு கருப்பு மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டு நடு இரவில் கிளம்பினான். மானேஜர் வீடு, மில் காம்பவுண்டின் சுவர் ஓரமாயிருந்தது. ஒரு மரம் சுவரின் மேல் கிளைகளை நீட்டி வளர்ந்திருந்தது. வேலன் காம்பவுண்ட் சுவர்

ஏறி மரத்தின் கிளையில் தொத்திக் கொண்டான். பிறகு மரத்தின் கிளை வழியாகவே வீட்டின் மெத்தை ஜன்னலருகில் வந்து சேர்ந்தான். அது மானேஜர் படுக்கும் அறைக்குக் கொண்டு போய் விட்டது. மானேஜர் மேஜைச் சாவியைத் தலைக்கடியில் வைத்துத் தூங்கும் வழக்கம் அவனுக்குத் தெரியும்.

இருட்டில் மெதுவாகச் சாவிக் கொத்தை எடுக்கக் கைவிட்டான். ரிவால்வர்போல் ஒரு சாமான் கையில் அகப்பட்டது. பார்த்ததில் குண்டுகள் ஏற்றின ரிவால்வர்தான். அதை எடுத்துக் கொண்டான். கொத்துச் சாவியும் அகப்பட்டது. அதையும் எடுத்துக்கொண்டு ஆபீஸ் அறையில் மேஜையிருக்குமிடம் சென்றான். சாவியைப் போட்டு மேஜை சொருகுப் பெட்டியைத் திறந்து இழுத்தான். ஏதோ நாய் உறுமும் சத்தம் கேட்டது. கதவைச் சாத்தி விளக்கு ஸ்விச்சைப் போட்டான். வெளிச்சத்தில் தன்னுடைய கோம்பை நிற்பதைக் கண்டான். அது அவன் நிஜாரை வாயால் கவ்வி வெளியே இழுக்க ஆரம்பித்தது.

வேலனுக்கு எங்கே அது கத்திவிடுமோ என்ற திகில் வேறு. உடனே தன் கையிலிருந்த துப்பாக்கியை உபயோகிக்கத் தோன்றிற்று. அதில் காகிதத்தை அடைத்து நாயின் உடம்பு மேல் குறி வைத்துச் சுட்டான். சிறிது சத்தமுண்டாயிற்று. உடனே ஓடி எலக்ட்ரிக் விளக்கை அணைத்து விட்டு இடுப்பிலிருந்த கயிற்றை அவிழ்த்து வராந்தாவிற்கு ஓடி அதிலிருந்த இரும்புச் சுவருக்குக் கயிற்றை அவசரமாகக் கட்டி அதைப் பிடித்துக் கீழே இறங்கி ஓடினான். வந்த வழியாகவே மரமேறி காம்பவுண்ட் சுவரை யடைந்து ரிவால்வரை அங்கேயே எறிந்துவிட்டு வீடு வந்து சேர்ந்தான்.

மறு நாள் காலை மானேஜரிடமிருந்து ஒரு சேவகன் வந்தான். வேலன் பயந்தான். நடு நடுங்கின குரலில் "என்ன சங்கதி?" என்று கேட்டான். "மானேஜர் இதைக் கொடுத்தார்" என்று சேவகன் நோட்டுகளாக நாற்பது ரூபாயை வேலனிடம் கொடுத்தான். "இதை எதற்காக எனக்குக் கொடுக்கிறார்?" என்றான் வேலன்.

"நேற்று ஒரு திருடன் வந்திருந்தான். நீ துரைக்குக் கொடுத்த நாய் குலைத்துத் தன்னுடைய உயிரையே பலி கொடுத்தது. திருடன் அதைத் துப்பாக்கியால் சுட்டு விட்டு ஓடி விட்டான். இல்லாவிட்டால் அவன் பணத்தைத் திருடிக்கொண்டிருப்பதோடு, துப்பாக்கியால் யாரையாவது சுட்டு விட்டுக்கூட இருப்பான்" என்று சேவகன் சொன்னான்.

"எனக்குப் பணம் வேண்டாம்" என்று வேலன் ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டான். அவன் மனைவி எவ்வளவோ மன்றாடியும் அந்தப் பணத்தை அவன் விரலாலும் தொடவில்லை.

அடுத்த நாள் சேவகன் மறுபடியும் வேலனை ஆலைக்கு அழைத்துச் சென்றான். அவன் மறுபடியும் வேலையில் சேர்க்கப்பட்டான். தொழிலாளர் தலைவருக்கும் மானேஜருக்கும் ஏதோ சமரசமேற்பட்டு வேலை நிறுத்தமும் முடிந்து ஆலையில் மறுபடியும் முன் போலவே வேலை நடக்க ஆரம்பித்தது. அந்த நாய் செய்த ஊழியத்தால் மானேஜரின் மனோநிலையே மாறிப் போயிற்று என்று சொல்லிக் கொள்கிறார்கள்.



எப்பொழுதும்
அவனை
கவனித்துக்
கொண்டிருக்க
முடியாது





—ஆனால் அவனை 'அழுக்கு அபாய'த்திலிருந்து காப்பாற்றலாம்

உங்கள் கண் எதிராக விளையாடின பருவம் கடந்து விட்டது. அவன் இப்பொழுது தானாகவே விளையாடவோ, தின்பண்டம் வாங்கவோ அல்லது இதர குழந்தைகளுடன் விளையாடவோ விரும்புகிறான். ஆனால் வீடு திரும்பும் பொழுது அழுக்கு படிந்து, வியர்த்து வருகிறான். அவனுக்கு லைப்பாய் பழக்கத்தை (அதாவது தவறாமல் லைப்பாய் ஸோப்பால் சுத்தம் செய்து கொள்ளும் முறையை)க் கற்பித்தால் அவனை அழுக்கு ஒன்றும் செய்யாது. இது மிகவும் முக்கியமானது. ஏனென்றால் அழுக்கில் நோயை விளைவிக்கக் கூடிய கிருமிகள் இருக்கின்றன. லைப்பாய் ஒருவித கிருமி நாசன சோப். ஆரோக்கியத்தை ரக்ஷிக்கவல்ல அபூர்வ தன்மை வாய்ந்த சோப் இந்தியாவிலேயே அது ஒன்று தான். அதுதான் அதன் உலகப் பிரசித்திக்குக் காரணம்.




**லைப்பாய்** நல்ல ஸோப்பைக் காட்டிலும் சிறந்தது அதுஒருநல்லவழக்கம்

L. 52-50 TM LEVER BROTHERS (INDIA) LIMITED

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.